# அம்புலிமாமா

மதிமுகம் : 105 ஜூன் : 2001 புன்னகை : 6



## பொருளடக்கம்

**கதைகள்**

| | | |
|---|---|---|
| ஒரு நிலை மனம் | பக்கம் | 9 |
| மாயாஜால மலை | ..... | 15 |
| பெரியண்ணனின் பெட்டகம் | ..... | 26 |
| அஞ்சா நெஞ்சன் | ..... | 39 |
| அது தான் நோய் | ..... | 43 |
| ஐயோ! ராணியின் சமையலா? | ..... | 54 |
| இருவரில் யார்? | ..... | 63 |

**இந்தியப் பண்பாடு-வரலாறு**

| | | |
|---|---|---|
| அகந்தையை அழித்த அரசர்கள் | ..... | 22 |

**அன்று இதே மாதத்தில் பிறந்தவர்**

| | | |
|---|---|---|
| பி. சி. மஹாலநோபிஸ் | ..... | 62 |

**புராணத் தொடர்கதை**

| | | |
|---|---|---|
| மகாபாரதம் | ..... | 47 |

**அம்புலிமாமாவின் அன்பளிப்பு**

| | | |
|---|---|---|
| வீர தீர பராக்கிரமன் | ..... | 57 |

**அம்புலிமாமா சிறப்புப் பகுதி**

| | | |
|---|---|---|
| செய்திக் கதிர் | ..... | 7 |

**உலகச் சுற்றுப்புற சூழல்**

**தூய்மை சிறப்பு மடல்**

| | | |
|---|---|---|
| எங்கும் தூய்மை | ..... | 31 |
| வாழ்க்கை மீண்டும் மலர்கிறது | ..... | 35 |

**போட்டி**

| | | |
|---|---|---|
| நம் இந்தியா - வினாக்கள் | ..... | 61 |
| போட்டோ வாக்கியப் போட்டி | ..... | 66 |


**சிறப்புப் படைப்பாக**

(வேதாளம் சொல்லும் கதை)





இந்தியப் பண்பாடு - வரலாறு



அது தான் நோய்

மாயாஜால மலை



Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K Press Pvt. Ltd., Chennai–600 026 on behalf of Chandamama India Limited, No.82, Defence Officers Colony, Ekattuthangal, Chennai - 600 097. Editor: Viswam

உங்களது உற்றார் உறவினர் அயல்நாடுகளில் இருக்கிறார்களா? அவர்கள் தம் நாட்டில் இல்லாதது போல உணர்கிறார்களா?



அவர்களுக்கு அம்புலிமாமாவையோ அதன் மொழிப்பதிப்புகளில் ஒன்றையோ பரிசாக அளியுங்கள். அவர்களுக்கு அவர்களது பழங் காலப் பெருமையை அவர்களது மொழியில் அளிக்கப்படும் பரிசு இது.




சந்தா விவரம்

எல்லா நாடுகளுக்கும் விமானத்தபாலில் பனிரெண்டு இதழ்களுக்கு ரூ 900. உங்களது சந்தா தொகையை டி.டியாகவோ மணியார்டராகவோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்று எழுதி கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

SUBSCRIPTION DIVISION
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony,
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

அம்புலிமாமாவைப் பரிசாக அளியுங்கள்.
நமது மண்வாசனையைப் பரிசளியுங்கள்!

ஆசிரியர் :
விஸ்வம்

இப்பத்திரிகையில் விளம்பரங்களை வெளியிடத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

சென்னை
அபிராமி சுவாமி
போன்: 044-2347384 2347399

பெங்களூர்
சுதீர் சலரியா
போன்: 080-5598859 5550821 5245265

கோல்கத்தா
ஆஷிஷ் லாஹா
போன்: 033-2349529

டில்லி
மோனா பாட்டியா
போன்: 11-6515111 6565513 6565516

மும்பை
ஷகீல் முல்லா
போன்: 022-2661599 2661946 2653057

சந்தமாமா பத்திரிகைப் பிரிவு
நெ. 82, டிஃபன்ஸ் ஆஃபிசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல்,
சென்னை - 600 097.
போன்: 234 7384, 234 7399
ஃபேக்ஸ்: 234 7384
E-mail : chandamama@chandamama.org

**For USA**
**Single copy $2**
**Annual subscription $20**
***Residents of USA and Canada can mail their remittances to :***
**INDIA ABROAD**
**43 West 24th Street**
**New York,**
**NY 10010**
**Tel: (212) 929-1727**
**Fax (212) 627-9503**
**E-mail:mail@indiaabroad.com**



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்கரபாணி

## சிறுவர்கள் ஒன்றுபட வேண்டும்

குஜராத்தில் பூகம்பம் ஏற்பட்டபோது உலகின் எல்லா பகுதியினரும் ஒரே மனதுடன் மனித நேயம் காட்டி எல்லா உதவிகளையும் செய்தார்கள். இதில் மதம், இனம், நிறம் என்ற வேறுபாடு எதுவும் காட்டப்படவில்லை. ஒரு பேரதிர்ச்சி தரும் நிகழ்ச்சி நல்ல மனிதர்களை ஒன்று பட வைத்து உதவச் செய்யும் என்பது இதனால் தெரிகிறது.

இத்தகைய மனப்பான்மை வர சிறுவர்களுக்கு நல்ல கல்வியை அளிக்க வேண்டும். தற்போதைய கல்வி ஏதோ சில விவரங்களை மனப்பாடம் செய்து நினைவில் வைத்துக் கொள்ளச் செய்கிறது. ஆனால், கல்வி என்பது நற்பண்புகளைப் புகட்டு வதாயும் பிறரை மதிக்க உணர்த்துவதாயும் உழைப்பின் மேன்மையை அறிய வைப்பதாயும் இருக்க வேண்டும். இப்படி இல்லாது வன்முறையைத் தூண்டுவதாக இருந்தால் சிறுவர் சிறுமியரின் மன வளர்ச்சி தடைப்படும். நாட்டில் அமைதி யின்மை ஏற்பட்டு சட்டம் ஒழுங்கு சீர் குலைந்து விடும். இத்தகைய நிலை உருவாக விடாதபடி சிறுவர் சிறுமியருக்குக் கல்வி அளிக்கப்பட வேண்டும்.

அமெரிக்கா போன்ற நாடுகளில் பள்ளிச் சிறுவர்களிடையே வன்முறைகள் தலைதூக்குவதாகப் பத்திரிகைகளில் படிக்கி றோம். நம் நாட்டில் சிறுவர்கள் துணிந்து வெள்ளம், நெருப்பு ஆகியவற்றிலிருந்து பலரைக் காப் பாற்றிய செய்திகளைப் படித்து மகிழ்கிறோம். அண்மையில் 12 வயதுச் சிறுமி ஒரு வங்கிக் கொள்ளை நடவாமல் தடுத்து அவ்வங்கிக் காவலாளியைக் காப்பாற்றினாள் என்ற செய்தியைப் படித்து பெருமிதம் அடைகிறோம்.

உங்கள் நண்பனான அம்புலிமாமா நீங்கள் நல்வாழ்வு பெற ஒன்று பட்டு நற்செயல்களைப் புரிய வேண்டுகிறது.



# செய்திக்  கதிர்

## 'மிர்' இனி இல்லை

ரஷ்ய விண்வெளி நிலய மான 'மிர்' அது நிறுவப் பட்ட 15 ஆண்டுகளுக்குப் பிறகு இந்த ஆண்டு மார்ச் 23ல் செயலற்று முடிவுற்றது. இது 1786ல் விண்ணில் செலுத்தப்பட்டது.

ஆரம்பத்தில் இதன் ஆயுள் மூன்று வருடமே என நிர்ணயிக்கப்பட் டது. ஆனால் அது விண் ஆராய்ச்சிக்கு மிகவும் பயன்பட்டதால் அதன் ஆயுள் நீடிக்கப்பட்டது. இந்த 15 ஆண்டுகளில் 104 ரஷ்ய விண்வெளி வீரர் களும் அமெரிக்க விண் வெளி வீரர்களும் இத னை அவ்வப்போது பயன்படுத்தியுள்ளார்கள்.

இதில் 16,500 சோத னைகள் நடத்தப்பட்டன. 86,300 தடவைகள் இது சுழன்று வந்தது.

'மிர்' ரஷ்யாவால் செலுத்தப்பட்டாலும் 1991ல் சோவியத் யூனியன் பல சிறுநாடுகளாகப் பிரிந்ததால் ரஷ்யாவால் 250 மில்லியன் டாலர் களை ஆண்டுதோறும் இவ்விண்வெளி நிலயத் திற்காக செலவிட முடிய



வில்லை. இதனால் அது அமெரிக்காவுடன் சேர்ந்து அதைப் பராம ரித்தது. இந்த 140 டன் நிறையுள்ள நிலையம் பசிபிக் மாக்கடலில் விழுந்தது வரலாற்றுக் சிறப்பு பெற்ற நிகழ்ச்சி. ரஷ்யப் பொறியாளர்கள் இதைத் திட்டமிட்டபடி சரியாக இறக்கினார்கள். இது 1500 துண்டுகளாகிக் கடலில் விழுந்தது.

## 'மிர்' பற்றிய சில தகவல்கள்.

☛ மிர் விண் வெளியில் இருந்த போது 12 ஆண்டுகள் 6 மாதம் அதில் மக்கள் வதித்தனர். விண் வெளி வீரர் வலேரி போல் யகாவ் தொடர்ந்து 437 நாட் களை இந்த நிலையத்தில் இருந்து கழித்திருக்கிறார். ஷானன் லூசிட் என்ற பெண் மணியும் இதில் 188 நாட்கள் வசித்திருக்கிறார்.

இந்த நிலையம் தரைக்கு வந்து அழிந்த போது அதன் நூல கத்தில் இருந்த 100 புத்தகங்கள் எரிந்து போயின. இந்த எரிந்து போன நூல்களில் பைபிளின் பிரதியும் திருக்குரானின் பிரதி யும் முதலாவது விண்வெளி வீரர் யூரிககாரினின் படமும் இருந்தன. மேலும் 11 டன் நிறை யுள்ள விஞ்ஞான சாதனங்களும் அழிந்து போயின.

☛ இந்த நிலயம் அழிக்கப்படு முன் ரஷ்ய நாடாளுமன்ற உறுப் பினர்கள் பலர் ரஷ்ய அதிபர் விளாடிமிர் புடினிடம் அதை அழிக்க வேண்டாம் என வேண் டுகோள் விடுத்தனர். இந்த உறுப்பினர்களில் இருவர் விண்வெளி வீரர்கள்.

## பூமியிலிருந்து செவ்வாய் கிரகப் படங்கள்

ஷலின்ஹரைல்கா (15) டன் மேஹிவாட்கர் (13) விகாஸ் சாரங்கத்ரா (10) என்ற இந்தியச் சிறுவர்கள் மற்ற ஆறு சிறுவர்களுடன் சேர்ந்து மலினிலுள்ள 'நாசா' செவ்வாய் விண்வெளி ஆராய்ச்சிக் கூடத்திலிருந்து செவ்வாய் கிரகத்தைப் படம் பிடித்தனர்.

இவர்கள் எடுத்த படங் களில் அக்கிரகத்தின் மேடு பள்ளங்கள், பனிப்பகுதி, நீர் உள்ள இடங்கள் மிகத் தெளிவாகத் தென்படு கின்றன.

## ஐந்து ஐம்பதை அடைந்து விட்டது

''டென்னிஸ் தி மெனஸ்' என்ற ஐந்து வயதுச் சிறுவனைக் கொண்ட கார்ட்டூன் தொடரைப் பல பத்திரிகைகளில் பார்த்து ரசித்திருப்பீர்கள்.

இதனை அளித்தவர் ஹென்றி ஹாங்க் கெட்செப். டென்னிஸ் உண்மையில் கெட்செமின் மகனின் பெயரே. டென்னிஸ் நான்கு



வயதுச் சிறுவனாக இருக்கையில் அவனது தாயார் 1951 இந்தக் கார்ட்டூன் தொடரை ஆரம்பிக்கச் சொல்லவே கெட்செமும் ஆரம்பித்தார்.

இந்தக் கார்ட்டூன் தொடர் சிறுவர்களையும் பெரியவர்களையும் மிகவும் கவர்ந்து விட்டது.

### நில அதிர்ச்சியைச் சமாளிக்கப் பயிற்சி

குஜராத்தில் சிறுவர்களுக்கு பூகம்பத்திற்குப் பின் இடிபட்ட கட்டடங்களிலிருந்து எப்படி மக்களையும் பொருட்களையும் மீட்பது என்னும் பயிற்சி அளிக்கப்படுகிறது.

எச்சரிக்கை மணி அடித்ததும் மாணவர்கள்தம் ஆசிரியர்கள் உடன்வகுப்பு அறைகளிலிருந்து ஒழுங்காக வெளியே வருகிறார்கள்.

எல்லோரும் வந்த பின் தலைமை ஆசிரியரும் அங்கு வருகிறார். இதெல்லாம் ஒரு நிமிடத்திற்குள் ஒரு அகமதாபாத் பள்ளியில் பயிற்சியின் போது நடந்தது.

### நூறு கோடியுடன் மேலும் சேர்ந்தது

சென்ற ஆண்டு மே முதல் தேதியன்று பிறந்த குழந்தையால் இந்தியாவின் மக்கள் தொகை 100 கோடியை அடைந்தது. மக்கள் தொகை கணிப்பின் முதலாவது கட்டம் பிப்ரவரி 28ல் முடிவடைந்தது. இதன் பத்து மாதங்களுக்குப் பின் மக்கள் தொகையில் 27,015,247 கூடி விட்டதாகத் தெரிய வந்தது. மொத்த மக்களில் ஆண்கள் சுமார் 53 கோடி எனவும் பெண்கள் சுமார் 47 கோடி எனவும் கணக்கு எடுக்கப்பட்டுள்ளது. சீனாவுக்கு அடுத்தபடி இந்தியாவில் தான் 100 கோடிக்கும் மேல் மக்கள் உள்ளனர். இந்தியாவில் எழுத்தறிவு பெற்ற ஆறு வயதிற்கும் மேற்பட்டவர்கள் 65.83 சதமானவர். கேரளாவில் தான் அம்மாநில மக்கள் தொகையில் 90.92 சதம் எழுத்தறிவு பெற்றவர்கள். இதற்கு அடுத்த இடத்தை மிஜோராம் பெறுகிறது. மூன்றாவது இடம் லட்சத் தீவுகளுக்கு. 2001 மக்கள் தொகை கணக்கு எடுப்பிற்கு 1,700,000 பேர்கள் 20 கோடி வீடுகளுக்கும் 640,100 கிராமங்களுக்கும் 5200 நகரங்களுக்கும் சென்றனர். 2001 மக்கள் தொகை 14வதாகும். இந்தியாவில் முதல் மக்கள் தொகைக் கணிப்பு 1871ல் நடந்தது.

வேதாளம் சொல்லும் கதை

# ஒரு நிலை மனம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த நள்ளிரவில் பயங்கர சூழ்நிலையில் இப்படிச் சிரமப்படுவதைப் பார்த்தால் நீ உன் மனதை அடக்கி ஒரு நிலையில் வைக்க முடியாமல் தத்தளிக்கிறாயோ என்று சந்தேகப்படுகிறேன். இதை விளக்க



சிவதாசன் என்பவனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.

கணேச பட்டர் என்பவரின் குருகுலத்தில் சிவதாசன் என்ற இளைஞன் கல்வி பயின்று வந்தான். பதினைந்து வய்து வரை எல்லாம் கற்றபின் அதற்குப் பிறகு என்ன செய்வது என்று அவனுக்குத் தோன்றவில்லை. அது பற்றி அவன் தன் குருவிடமே கேட்கவே, அவரும் ''நீ எவ்வளவு தான் கற்றிருந்தாலும் உன் மனதை ஒரு நிலையில் வைக்கப் பழகிக்கொள்ள வேண்டும். அதற்கு நீ கொஞ்சகாலம் தவம் செய்தால் கடவுள் உனக்கு அருள் புரிவார்'' எனக் கூறினார்.

அவர் கூறியபடி சிவதாசன் காட்டிற்குப் போய் ஒரு ஆலமரத்தடியில் அமர்ந்து தவம் செய்யலானான். காய் கனி, கிழங்குகளைப் புசித்து காட்டில் அவன் கடும் தவம் ஏழு வருடங்கள் புரிந்தும் கடவுள் அவன் முன் தோன்றவில்லை.

ஒரு முறை அவ்வழியாகச் சென்ற அவனது குரு கணேசபட்டர் அவனைக் கண்டு ''எப்படி இருக்கிறாய்?'' என்று கேட்கவே சிவதாசனும் ''குருவே! நான் கடும் தவம் புரிந்தும் கடவுள் என் முன் வரவில்லையே'' என்றான். அது கேட்டு குருவும் ''நீ உன் மனதை ஒரு நிலையில் நிறுத்தி தவம் செய்யவில்லை என்று தெரிகிறது. கவலைப்படாதே. நான் இப்போது மணிப்புரநாட்டிற்குச் சென்று கொண்டிருக்கிறேன். அங்கிருந்து திரும்பி வந்து உன்னைக் கண்டு உன் பிரச்சினைக்குத் தீர்வு காண்கிறேன்'' என்று கூறிவிட்டுச் சென்றார்.

அப்போது மணிப்புரமன்னனுக்கு ஒரு சிக்கலான நிலை உருவாகி இருந்தது. அவனது பொக்கிஷ அதிகாரி இறந்து விட்டதால் அப்பதவிக்குத் திறமையான ஒருவரைத் தேர்ந்தெடுக்க வேண்டி வந்தது.

முன் நாள் பொக்கிஷ அதிகாரி பொக்கிஷம் வைக்கப்பட்டிருந்த கட்டடத்திற்கு நேர் எதிரிலேயே இருந்த வீட்டில் வசித்துக் கொண்டு பொக்கிஷத்தை அல்லும் பகலும் கண்ணும் கருத்துமாகப் பாதுகாத்து வந்தார். அங்கு ஓர் ஈ, எறும்பு கூட நுழையாதபடியும் ஏதாவது சிறு சத்தம் இரவில் கேட்டாலும் ஓடி போய்ப்



பார்த்து ஆபத்து எதுவும் இல்லை எனக் கண்டு திருப்தி அடைந்து திரும்பி வருவார். அவரைப் போன்ற ஒருவர் கிடைப்பாரா என்றே மன்னன் கவலைப்பட்டுக் கொண்டி ருந்தான். அப்போது அப்பதவிக்கான எல்லாத் தகுதிகளும் தமக்கு இருப்ப தாகக் கூறிக் கொண்டு விந்தன், சந்திரன், சுந்தரம் என்ற மூவர் மன்னன் முன் வந்தனர்.

அம்மூவரில் விந்தன் இசைக் கலைஞன். சந்திரன் கடவுள் பக்தன். சுந்தரம் நன்கு உழைப்பவன். மூவ ரும் தம் துறைகளில் மிகச் சிறந்து விளங்கியதால் அவர்களில் யாரைத் தேர்ந்தெடுப்பது என்று மன்னன் குழம்பிக் கொண்டிருந்தான். இச்சம யத்தில் தான் கணேசபட்டர் அவனைக் காண வந்தார். மன்னன் அவரிடம் தன் பிரச்சினையைக் கூறி அதற்குத் தீர்வு காண வழி கூறுமாறு அவரிடம் வேண்டினான்.

கணேச பட்டரும் அம்மூவரையும் அழைத்து ''பொக்கிஷதாரர் பதவிக்கு நீங்கள் தகுதி பெற்றவர்களா எனப் பரீட்சித்துப் பார்க்க விரும்புகிறேன். சிவதாசன் என்பவன் ஒரு காட்டில் ஒரு பெரிய ஆலமரத்தடியில் அமர்ந்து தவம் செய்து கொண்டிருக்கிறான். அவன் முன் விந்தன் இரண்டு மணி நேரம் தொடர்ந்து பாட வேண்டும். இப்படி விந்தன் பாடிக் கொண்டிருக் கையில் சந்திரன் முட்களுள்ள மலர் கள் நூறைப் பறித்துக் கொண்டு வர வேண்டும். சுந்தரம் அதே இரண்டு மணி நேரத்துள் அந்த ஆலமரத்தின் எதிரே யுள்ள மரத்தை வெட்டி வீழ்த்தி விறகு களாக்க வேண்டும். இது தான் உங்கள் பரீட்சை'' என்றார். அவர்கள் அதற்குச் சம்மதிக்கவே கணேசபட்டர் அவர்களையும் மணிபுர மன்னனை யும் சில வீரர்களையும் தம்மோடு கூட்டிக் கொண்டு சிவதாசன் தவம் செய்யும் இடத் தை அடைந்தார்.

கடும் தவம் செய்து கொண்டிருக் கும் சிவதாசனைக் கண்டு மன்னன் வியப்படைந்தான். விந்தன் அவன் முன் அமர்ந்து பாடலானான். ளள சந்திரன் முட்களுள்ள மலர்களை பறிக்கலானான். சுந்தரம் அங்கு எதிரே இருந்த மரத்தை வெட்டலானான். அவர்கள் மூவரும் தம் வேலைகளில் ஈடுபட்டிருக்கையில் சில வீரர்கள் 'வீல் வீல்' என்று கத்தினார்கள். இரு வீரர்கள் வாட்போர் புரியலாளார்கள்.



ஒரு வீரன் புலி போல் உறுமி கோட்டான் போலக் கத்தி, ஆற்றில் வெள்ளம் வருகிறதெனக் கூக்குர லிட்டான். இவ்வாறு இரண்டு மணி நேரம் கழிந்தது. விந்தன் அந்த நேரத் துள் முப்பது பாடல்களைப் பாடி முடித்தான். சந்திரன் முட்களுள்ள நூறு மலர்களைப் பறித்துக் கொண்டு வந்தான். சுந்தரம் மரத்தை வெட்டி ஒரு வண்டி விறகு வெட்டிக் குவித் தான். சிவதாசனோ தியானத்தில் மூழ்கி இருந்தான்.

கணேச பட்டரும் அம்மூவரிட மும் ''நான் சொன்ன வேலைகளைக் குறித்த காலத்துள் நீங்கள் செய்து முடித்திருக்கிறீர்கள். இப்போது நான் கேட்கும் கேள்விக்கு பதில் கூற வேண்டும். நீங்கள் உங்கள் பணி களில் ஈடுபட்டிருந்த போது உங் களைச் சுற்றி என்ன நடந்தது?'' என்று கேட்டார். மூவருமே ''எதுவுமே நடக்கவில்லையே. நாங்கள் எங்கள் வேலைகளில் முழு கவனத்தைச் செலுத்தியவாறு இருந்ததால் எங் களைச் சுற்றி என்ன நடந்தது என்று அறிய முடியவில்லை.'' என்றார்கள். அது கேட்டு கணேச பட்டர் புன்னகை புரிந்தார். பிறகு அவர் 'சிவதாசா' 'சிவதாசா' என்று பல முறை கூப் பிட்டார். தியானத்தில் மூழ்கி இருந்த அவன் கண்விழித்துப் பார்க்க வில்லை. யாவரும் அவன் தியானம் கலைந்து எப்போது எழுவான் என்று காத்திருந்தார்கள். மாலையில் சூரிய மறையும் போது தான் சிவதாசன் தியா னம் கலைந்து எழுந்தான்.

மன்னன் அவனது கடும் தவம் கண்டு ஆச்சரியப்பட்டான். கணேச பட்டரும் '' சிவதாசா! இன்று உன் தவத்திற்கு எவ்வித இடைஞ்சலும் ஏற்பட்டு விட வில்லையே?'' என்று கேட்டார். அதற்கு இல்லை எனக் கூறு வது போல அவன் தலை அசைத்து ''குருவே! இன்று காலை நான் தவம் செய்யும் போது ஒரு யானையை ஒரு சிங்கம் துரத்தியது. இதன் பிறகு நான்கு மான்கள் துள்ளிக் குதித்து ஓடின. யாரோ ஒருவன் முப்பது பாடல்களைப் பாடினான். இன்னொ ருவன் 'உஸ் உஸ்' என்று கூறித்தன் கையில் முள் குத்துவதைப் பொருட் படுத்தாமல் முள்ளுள்ள மலர்களைப் பறித்தான்.

வேறொருவன் விறகு வெட்டிக் கொண்டிருந்தான். நடுநடு வே 'வீல்

வீல்' லென்ற கத்தலும், இருவர் வாட்போர் புரிந்த சத்தமும், புலியின் உறுமலும், கோட்டானின் கூவலும் கேட்டது. யாரோ ஆற்றில் வெள்ளம் வருவதாக எச்சரிக்கை செய்தான். இதன் பின் தாங்கள் என்னைப் பல முறை கூப்பிட்டீர்கள். இப்படிப் பல இடைஞ்சல்கள் என் தவத்திற்கு ஏற் பட்டாலும் அவற்றைப் பொருட் படுத்தாமல் நான் தவம் செய்து கொண்டிருந்தேன். குருவே! இப் போது கூறுங்கள் என் மனம் ஒரு நிலையில் தானே இருந்தது?'' என்று கேட்டான்.

இதைக் கேட்ட கணேச பட்டர் புன்னகை புரிந்தவாறே மன்னனைப் பார்த்து ''மன்னா! விந்தனும், சந்திர னும், சுந்தரமும் தமது தொழில்களில் முழு ஈடுபாடு கொண்டவர்களே. ஆனால் அவர்கள் அந்த துறையில் மட்டுமே திறமை மிக்கவர்கள். நீங்கள் சிவதாசனின் செயலை நேரில் கண்டீர் கள். எனவே பொக்கிஷதாரர் முன்பு வசித்து வந்த வீட்டை என் சீடன் சிவ தாசனுக்குக் கொடுத்து அவனையே பொக்கிஷதாரராக நியமியுங்கள்'' என்றார். அதைக் கேட்ட மன்னனும் மகிழ்ந்து போய்'' என் பிரச்சினை யைத் தீர்த்து வைத்த தங்களுக்கு மிக்க நன்றி'' என்றான்.

கணேச பட்டரும் சிவதாசனிடம் ''சிவதாசா! நீ கேட்ட படி உன் எதிர் காலம் என்ன என்பதை உணர்த்தி விட் டேன். இப் பதவியை நீ திறன் பட வகித்து நல்லதொரு பெண்ணை மணந்து கொண்டு இன்பகரமான இல்வாழ்க்கை நடத்தி வா'' என ஆசி கள் அளித்து விட்டு அங்கிருந்து



சென்றார்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! விந்தனும், சந்திரனும், சுந்தரமும் தம் வேலைகளில் ஈடுபட்ட போது வேறெதையும் கவனியாமல் விந்தன் பாடிக்கொண்டே இருந்தான். தன்னைச் சுற்றி என்ன நடக்கிறது என்று பார்க்கவில்லை.

சந்திரனும் மலர்களைப் பறிப் பதில் தான் கவனமாக இருந்தான். அவனும் தன்னைச் சுற்றி நடப்பதை அறியவில்லை. சுந்தரமும் விறகு வெட்டுவதில் ஈடுபட்டு தன்னைச் சுற்றி என்ன நடக்கிறது என்று பார்க்கவில்லை. தம் வேலைகளைச் செய்தார்கள்.

சிவதாசனோ தவம் செய்யும் போது தன்னைச்சுற்றிலும் என்ன நடந்தது என அறிந்து கூறியவன். இவர்களில் சிவதாசனைப் பொக்கிஷதாரர் பதவிக்கு கணேச பட்டர் ஏன் தேர்ந்தெடுத்தார்? இக் கேள்விக்கு சரியான பதில் தெரிந்திருந்தும் நீ கூறாவிடில் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''பொக்கிஷதாரர் பதவியில் இருப்பவன் பொக்கிஷத்தில் உள்ளதைப் பாதுகாப்பதற்காக மட்டும் அல்லாமல் பொக்கிஷம் இருக்கும் இடத்தைச் சுற்றி என்ன நடக்கிறது என்பதையும் கவனித்து அறிந்து அதற்கேற்ப நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். விந்தன், சந்திரன், சுந்தரம் ஆகிய மூவரில் யாரைத் தேர்ந்தெடுத்தாலும் அவர்கள் பொக்கிஷத்தை மட்டும் பாதுகாத்துக் கொண்டிருப்பவர்களேயொழிய, அதை சுற்றி என்ன நடக்கிறது, எத்தகைய ஆபத்து வரலாம் என்றெல்லாம் கவனிக்க மாட்டார்கள். சிவதாசனோ ஒரு வேலையின் எல்லா அம்சங்களையும் கவனித்துச் செயல்படுபவன். எனவே தான் கணேச பட்டர் அவனை பொக்கிஷதாரனாக்கும்படி மன்னனிடம் கூறினார்'' என்றான்.

விக்கிரமனின்சரியானஇந்தபதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்துவந்தஉடலோடுவேதாளம்உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக்கொண்டது.





# மாயாஜால மலை

## 5

**(ஜீவதத்தனும் கஜவர்மனும் சிங்கத்தை விரட்டிவிட்டு அங்கிருந்து வெளியேற வழி தேடலானார்கள். அப்போது ஓரிடத்தில் நிறைய தானியம் வைக்கப்பட்டிருப்பது கண்டு அதற்கு அவர்கள் நெருப்பை வைத்து எரிக்கவே அதனருகிலிருந்த ஒரு அறையில் ஒரு கிழவன் அலறுவதைக் கேட்டு அங்கு சென்றனர்)**

அப்போது அந்த அறையில் சங்கிலியால் பிணைக்கப்பட்டிருந்த கிழவனை தன் கையிலிருந்த மந்திரத் தடியால் தட்டி ஜீவதத்தன் அவனை விடுவித்தான். கஜவர்மன் அவனை அந்த அறையிலிருந்து சற்று தூரத் திற்கு இழுத்துச் சென்று ''யார் நீ? ஏன் இங்கு அடைக்கப்பட்டிருக்கிறாய்?'' என்று கேட்டான்.

அப்போது அவன் ''நான் தான் இங்கு பூசாரியாக இருந்தவன். நான் வளர்த்த பெண் என்னை அந்த அறை யில் அடைத்து விட்டு தானே தேவி யின் பூசாரி என அறிவித்து என் பதவி யைப் பறித்துக் கொண்டாள். போலி யான அவள் இனியும் உயிர் வாழ முடியாது'' என்றான்.

அப்போது அங்கு வந்து விட்ட ஜீவ தத்தன் ''கிழவரே! உங்களைக் காப் பாற்றி விட்டோம். இனி நாங்கள் இப் போதே இங்கிருந்து வெளியேற வேண்டும். உங்களைப் பற்றி பிறகு சாகவாசமாகக் கேட்டு அறிந்து கொள் கிறோம். நீங்கள் எங்களுடன் காட் டிற்கு வரப் போகிறீர்களா அல்லது நீங்கள் இங்கேயே இருக்கப் போகி றீர்களா? சட்டெனக் கூறுங்கள்'' என் றான். கிழவனோ ''நான் இங்கிருந்து எங்கும் போக மாட்டேன். எனக்குத் துரோகம் செய்த அந்தப் பெண்



பிசாசை ஒழிப்பது தான் என் முதல் வேலை. பழிக்குப் பழி வாங்கியே தீருவேன்'' என ஆவேசத்துடன் கூறினான்.

அதைக் கேட்ட ஜீவதத்தன் ''ஓ! இப்படி ஒரு விஷயமா! உன்னை அந்தப் பெண் உங்களுக்கு எந்த முறையில் உறவு? கொஞ்சம் விளங்கும் படிச் சொல்லுங்கள்'' என்று கேட்டான். கிழவன் ''இவள் குழந்தையாக இருந்த போது அநாதையாக காட்டில் கிடந்தாள். அக்குழந்தை மீது இரக்கம் கொண்டு அதனை எடுத்து வந்து வளர்த்து பெரியவளாக்கி அவளுக்கு என் மந்திர சக்தியில் கொஞ்சம் அளித்தேன். அச்சக்தியைப் பயன்படுத்திக் கொண்டு என்னை வஞ்சகமாய் சிறைப்படுத்தி விட்டுத் தானே சகல சக்தி வாய்ந்தவள் எனக் கூறி பூசாரியாகி விட்டாள். அவளை லேசில் விட மாட்டேன். பழி வாங்கியே தீருவேன்'' என்றான்.

ஜீவதத்தனோ ''இது உங்கள் சொந்தப் பிரச்சினை. நீங்களே தீர்த்துக் கொள்ளுங்கள். நாங்கள் போகிறோம். வா, கஜவர்மா'' எனக் கூறி அடி எடுத்து வைத்தான். அப்போது பூசாரியம்மா தன் கையாட்களான மந்திரவாதியுடனும் ஜடாமுனியுடனும் மற்றும் சில ஆட்களுடனும் அங்கு வந்தாள். அவள் தான் சிறையிலிட்ட கிழவன் விடுதலை பெற்று விட்டதையும் அவனுடன் நிற்கும் ஜீவதத்தனையும் கஜவர்மனையும் கண்டு கடும் கோபம் கொண்டாள். உடனே தன் ஆட்களிடம் ''இவர்களைப் பிடித்து கட்டி இழுத்துக் கொண்டு போங்கள். காளிதேவிக்கு இவர்களை பலியிட வேண்டும்'' எனக் கட்டளை இட்டாள்.

இதற்குள் அங்கு வந்திருந்த இருவர் கிழவனை அடையாளம் கண்டு கொண்டு ''இதோ நம் பூசாரி அய்யா வந்து விட்டார். அய்யா வாழ்க!'' எனக்கத்தினார்கள். அப்போது பூசாரியம்மாவின் அருகே நின்ற இருவர் ''பூசாரியம்மா வாழ்க! அம்மா வாழ்க!'' என்று கோஷம் போட்டார்கள். சற்று நேரத்துள் அங்கிருந்தவர்கள் இரு பிரிவுகளாகப் பிரிந்து 'அய்யா வாழ்க!' 'அம்மா வாழ்க' என்று கோஷங்களை எழுப்பி ஒருவரை மற்றவர் தாக்கலானார்கள்.

அப்போது கிழவன் ''சீடர்களே! இப்போது இந்த மோசக்காரப் பெண் பூசாரியிடம் எந்த சக்தியும் இல்லை.

நான் இவளுக்குக் கொடுத்த மந்திர சக்திகளை எல்லாம் திரும்பப் பெற்றுக் கொண்டு விட்டேன். இனி இவளால் உங்களை எதுவும் செய்ய முடியாது'' என்று உரத்த குரலில் கூறினான். பூசாரி அம்மாவோ ''கிழவன் கூறுவது பொய். நம்பாதீர்கள். இவர்களைப் பிடித்துக் கட்டி இழுத்து வாருங்கள்'' என்றாள் ஆவேசமாக. கிழவனோ பலமாகச் சிரித்தவாறே ''ஏய் மோசக்காரியே! பெண்பிசாசே! யார் கூறுவது பொய்? உன்னைக் கண்டு எடுத்து வளர்த்துப் பெரிய வளாக்கி உனக்குக் கொஞ்சம் மந்திர சக்தியைக் கொடுத்தேன். அதை வைத்துக் கொண்டு இது நாள் வரை நீ ஆட்டம் போட்டாய். என்னை வஞ்சகமாகச் சிறைப் படுத்தினாய். இப்போது நான் இவ ளிடம் இருந்து விடுவிக்கப்பட்டேன். முதல் வேலையாக இவளுக்கு நான் அளித்த மந்திர சக்தியைத் திரும்பப் பெற்றுக் கொண்டேன். இவள் தன்னிடம் இன்னமும் அச்சக்தி இருப்பதாக நினைத்தால் அதை நிருபித்துக் காட்டட்டும்'' என்றான். அது கேட்டு அப்பெண் பூசாரி தன் கையிலிருந்த ஈட்டியைக் கிழவனுக்குக் குறி வைக்கலானாள். கஜவர்மன் சட்டென ஒரு அம்பை அவளது கைக்கு குறி வைத்து எய்தான். அம்பு அவள் கையில் தைக்கவே, அவள் பிடித்திருந்த ஈட்டி அவளது கையிலிருந்து நழுவி எங்கோ போய் விழுந்தது.

மறுநிமிடமே அவளுக்கு எதிராக கோஷங்கள் எழுந்தன. 'மோசக்காரி அம்மா ஒழிக! அய்யா வாழ்க!' என்று



பலர் கூவினார்கள். எங்கும் அடியும் குத்துமாகவும் இருந்தது. அதையெல்லாம் பார்த்த ஜீவதத்தன் 'கஜா. இந்த அய்யாவும் அம்மாவும் பயங்கரப் பேர்வழிகள். இவர்கள் சண்டை போட்டுக் கொண்டு யார் பூசாரி எனத் தீர்மானித்துக் கொள்ளட்டும். நாம் இங்கிருந்து காட்டிற்குப் போய் விடலாம்'' என்றான். கஜவர்மன் தன் வாளை எடுத்து பூசாரி அம்மாவின் அடியாளான மந்திரவாதியின் கழுத்தின் மேல் வைத்து ''உம். இங்கிருந்து வெளியே போய் காட்டை அடைய வழி காட்டு'' என்று உறுமினான்.

மந்திரவாதியும் ''ஓ! காட்டுகிறேன். எனக்குத் துணையாக ஜடா முனியையும் அழைத்துக் கொள்கிறேன்'' என்றான். கஜவர்மனும் ''அந்தத் தொடை நடுங்கியா உனக்குத் துணை? சரி சரி! கூட்டிக் கொள். உம்.



உடனே வழி காட்டு'' என்றான் மந்திர வாதியும் ஜடாமுனியும் முன் நடக்க அவர்களின் பின்னால் ஜீவதத்தனும் கஜவர்மனும் சென்றார்கள்.

சற்று நேரத்தில் குகையின் முன் வாயிலை அடைந்து விட்டார்கள். அப்போது மந்திரவாதி ''உங்களை நான் காட்டில் கொண்டு வந்து விட்டு விட்டேன். இனி நான் போகிறேன்'' எனக் கூறி ஜடாமுனியைப் பிடித்து இழுத்துக் கொண்டு குகைக்குள் வேகமாக ஓடிவிட்டான்.

ஜீவதத்தனும் கஜவர்மனும் தம் குடிலுக்குப் போவது எனத் தீர் மானித்துக் கொண்டு வழி நடந் தார்கள். சற்று தூரம் சென்றதும் ஒரு மலையின் விளிம்பில் ஒட்டகத்தின் மீது அமர்ந்து போய்க் கொண்டிருந்த ஒருவன் ஒட்டகத்தோடு விழுந்து உருண்டு வந்து கொண்டிருந்தான். ஒட்டகம் கால் ஒடிந்து துடி துடித்துக் கொண்டிருந்தது. உருண்டு வந்த மனி தனின் உடலிலும் பல இடங்களில் காயங்கள் ஏற்பட்டன.

அவன் முக்கி முனகிக் கொண்டே தட்டுத்தடுமாறி எழுந்திருக்க லானான். ஜீவதத்தனும் கஜவர்மனும் ஓடிச்சென்று அவனைத் தூக்கி நிறுத்தினார்கள்.

அப்போது ஜீவதத்தன் ''நீ அணிந்தி ருக்கும் ஆடைகளைப் பார்த்தால் காண்டாமிருகக் கூட்டத்தவரின் வயல்களில் பயிர்களைக் கொள்ளை அடித்தவன் போல் தெரிகிறதே'' என்று சற்றுக் காட்டமாகவே கேட் டான். அவனும் ''நான் ஒட்டக வீர கும்பலைச் சேர்ந்தவனென்றாலும் நான் வயலில் புகுந்து பயிர்களை அறுத்துக் கொண்டு சென்ற கூட்டத் தில் இருக்கவில்லை. நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்பதை வாஸ்து சாஸ்திர மேதை சொர்ணத் திடம் கேட்டால் அவர் கூறுவார்'' அவர் எனக்கும் என் கூட்டாளி களுக்கும் கட்டடங்கள் கட்டுவதற்குக் கற்களை எடுத்து வரும்படிக் கூறி யுள்ளார். அதன்படி நாங்கள் எங்கள் ஒட்டகங்களின் மீது கற்களை ஏற்றிச் சென்று கொண்டிருக்கிறேன்'' என் றான். கஜவர்மனோ ''நான் நம்ப மாட் டேன். சொர்ணம் உயிரோடு இருக்கி றானா? எங்கே இருக்கிறான்? சட் டெனச் சொல். இல்லாவிட்டால் உன் உயிர் உன் உடலில் இராது'' என்று மிரட்டினான்.

அவனும் ''இங்கே தான் சற்றுத்

தொலைவில் இருக்கிறார். அவர் எங்கள் தலைவர் சமரபாகுவிற்குத் தலைநகரைக் கட்டிக் கொடுக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறார். அதற்காகக் கற்களை ஏற்றிக் கொண்டு போய்க் கொண்டிருந்த போது தான் ஒட்டகத்தோடு நான் உருண்டு விழுந்து விட்டேன்'' என்றான்.

அதைக் கேட்ட கஜவர்மன் ''ஜீவா! இதென்ன! சொர்ணம் ஏதோ நகர நிர்மாணத்தில் ஈடுபட்டிருப்பதாக இவன் கூறுகிறானே. ஒட்டகக் கொள்ளைக்காரத் தலைவனுக்கு ஏன் சொர்ணம் உதவ வேண்டும்? அவன் தான் இவர்களை எல்லாம் வெறுப்பவனாயிற்றே'' என்று கேட்டான். ஜீவதத்தனும் ''நீ சொல்வது போல இவன் சொல்வதை நம்பவும் முடியவில்லை நம்பாமல் இருக்கவும் முடியவில்லை. சொர்ணம் ஒட்டகக் கூட்டத்தலைவனுக்கு ஒரு நகரைக் கட்டிக் கொடுக்கிறான் என்றால் அதற்கு ஏதாவது வலுவான காரணம் இருக்க வேண்டும். அவன் இக்கொள்ளைக் கூட்டத்தவரிடம் அகப்பட்டுக் கொண்டு நிர்பந்தத்தின் பேரில் தான் இந்த வேலையைச் செய்ய வேண்டி இருந்திருக்கும். அவன் இப்போது எந்த நிலையில் இருக்கிறானோ? அவனை நாம் சந்தித்து விசாரித்தால் எல்லாம் சரியாகி விடும். ஆனால் அவன் எங்கே இருக் கிறானோ? இந்த ஒட்டகக்காரனிடம் அது பற்றி விசாரித்தால் இவனிடமிருந்து நாம் எதையும் அறிந்து கொள்ள முடியாது. எனவே சற்றுப் பொறுத்திருப்போம்.'' என்றான். இப்படிப் பேசிக் கொண்டு



இருக்கையில் சொர்ணமே நான்கு ஒட்டக வீரர்களுடன் அங்கு வந்து சேர்ந்தான்.

அவன் ஜீவதத்தனையும் கஜவர்மனையும் பார்த்ததும் ''ஆ! என்ன ஆச்சரியம்! நீங்கள் தானா? என் ஆட்களில் ஒருவன் உருண்டு விழுந்து விட்டான் என்று கேள்விப்பட்டு ஓடோடி வந்தேன். அப்படி வந்ததால் தான் உங்களைக் காண முடிந்தது'' என்று மகிழ்ச்சி ததும்பக் கூறினான். ஜீவதத்தனும் அவன் முதுகில் பிரியமாய்த் தட்டி ''சொர்ணம்! நீ எப்படி இருக்கிறாய்? இந்தக் கொள்ளைக் கூட்டத்திற்கு ஒரு நகரை அமைத்துக் கொடுக்கப் போகிறாயாமே. அது உண்மையா?'' என்று கேட்டான்.

சொர்ணமும் ''ஆமாம். சமரபாகுவிடம் வசமாக மாட்டிக் கொண்டு

விட்டேன். இந்த நகர நிர்மாணம் முடிந்ததும் நான் என் நண்பன் விக்கிேனஸ்வரனைச் சந்தித்து அவனையும் கூட்டிக் கொண்டு கண்காணாத இடத்திற்குப் போய்த் தவம் செய்யப் போகிறேன்'' என்றான். அது கேட்டு ஜீவதத்தன்'' சரி. இப்போது என் இருப்பிடத்திற்கு வாருங்கள். அங்கு சாப்பிட்டு விட்டு நீங்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளலாம்'' என்றான்.

அவர்களும் அதற்கு இணங்கி சொர்ணத்துடன் அவன் இருக்கும் இடத்திற்குச் சென்றார்கள். அப்போது வழியில் கரடித்தோல் சுற்றிக் கொண்டு இருந்த ஒரு மனிதனைச் சுற்றி கொள்ளைக்காரர்கள் நின்று கொண்டு ஏதேதோ சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

அவர்களை சொர்ணம் கடிந்து கொண்டு ''யார் இப்படிக் கரடி வேஷம் போட்டுக் கொண்டு ஆடிக் கொண்டிருக்கிறான்?'' என்று கேட்டான். கரடிவேஷக்காரன் சொர்ணத்தைப் பணிவுடன் வணங்கி ''ஐயா! நானாக இந்த வேஷத்தைப் போட்டுக் கொள்ள ஒரு காரணம் இருக்கிறது. இன்று காலை தலைவருடன் காட்டிற்குச் சென்றேன். அங்கு அவரை யாரோ இருவர் வந்து பிடித்து இழுத்துக் கொண்டு போய் விட்டார்கள். அவர்கள் மலைக் காட்டு வாசிகள். அங்கிருந்து தப்பி இந்த வேஷத்தில் வந்தேன். நம் தலைவரை அவர்கள் என்ன பாடுபடுத்து வார்களோ?'' என்றான்.

சொர்ணமும் ''தலைவர் சமரபாகு மிகவும் நல்லவர். என்னை கண்ணியமாக நடத்தி வந்தார். அவரது கூட்டம் நம் காண்டாமிருகக் கூட்டத்தவரின் வயல்களில் விளைந்தவற்றை அறுத்துக் கொள்ளை கொண்டு போன போது என்னையும் பிடித்து இழுத்துச் சென்றது என்னவோ உண்மை தான். என்னை அவர் கொடுமைப்படுத்தவில்லை. எனவே, அவரை எப்படியாவது நீங்கள் தாம் காப்பாற்ற வேண்டும்'' என்று ஜீவதத்தனிடமும் கஜவர்மனிடமும் வேண்டினான். ஜீவதத்தனும் ''சரி. முதலில் அந்த சம்பவம் பற்றிய முழு விவரங்களை அறிவோம்'' எனக் கூறி கரடி வேஷக்காரனிடம் விசாரிக்கலானான்.

(தொடரும்)



# நீயும் ஒரு பண்டிதனா?

**ஓர் ஊரில் ஒரு பண்டிதர் இருந்தார். அவர் தாம் மெத்தப் படித்தவர் என்று கர்வம் கொண்டு ஊரைச் சுற்றி வந்து கொண்டிருந்தார்.** அவரது கொட்டத்தை அடக்க ஒரு குறும்புக்காரன் அவரிடம் ''ஐயா பண்டிதரே! நீங்கள் இந்த ஊரில் தான் உங்கள் பெருமையைக் கூறிக் கொண்டு திரிகிறீர்களே. வெளியூர் களுக்குப் போய் பல பண்டிதர்களுடன் வாதம் புரிந்து, வெற்றிவாகை சூடி வந்தால் உமது பெயரும் நம் ஊர்ப்புகழும் ஓங்குமே!'' என்றான்.

பண்டிதரும், அவன் சொல்வது சரி தான் என்று எண்ணி அதன் படிச் செய்ய, ஒரு நல்ல நாளில் தம் ஊரிலிருந்து புறப்பட்டார். அவர் அடுத்த ஊர் எல்லையை அடைந்த போது, அங்கு மாடு மேய்க்கும் ஒரு சிறுவனைக் கண்டார். அவனிடம் அவர் ''இந்த ஊரில் யாராவது பண்டிதர் இருக்கிறாரா? இருந்தால் நான் அவரோடு வாதம் புரிந்து வெல்லப் போகிறேன்'' என்றார்.

இச்சிறுவனும் தன் கையில் பிடி மண் எடுத்து ''என் கையில் எவ்வளவு மண் இருக்கிறது?'' என்று கேட்டான். பண்டிதரும் ''இதென்ன கேள்வி? எனக்கு எப்படித் தெரியும்? நான் அதை அளந்தோ அல்லது எடைபோட்டோ பார்த்தேனா?'' என்றார் சற்று காட்டமாக. அச்சிறுவனோ ''இது கூட சொல்லத் தெரியாத நீயும் ஒரு பண்டிதனா? என் கையில் இருப்பது ஒரு பிடிமண். இது தெரியாமல் மகா பண்டிதர் என்று கூறிக் கொண்டு, பிறருடன் போட்டி போட வந்து விட்டாயோ?'' என்று கூறிச் சிரித்தான்.

பண்டிதர் தலை குனிந்து கொண்டு தம் ஊருக்கே திரும்பி வந்து விட்டார்.



# பாரதப் பண்பாடு- வரலாறு

**ஒரு உயரிய நாகரீகத்தின் நிகழ்ச்சிகள்.**
**பரம்பரை பரம்பரையாக உண்மையைக் காண ஆய்வு**

## 16. அகந்தையை அழித்த அரசர்கள்



சிறுவர் சிறுமியர் சோமநாதரின் வருகைக்காகக் காத்திருந்தார்கள். சோமநாதர் வந்ததுமே ''தாத்தா! நீங்கள் எவ்வளவோ நல்ல கதைகளைக் கூறுகிறீர்கள். இம்மாதிரிக் கதைகள் எம் பாடப் புத்தகங்களிலும் இல்லை. ஆசிரியர்களும் வகுப்புகளில் கூறுவதில்லை. இது ஏன்?'' என்று கேட்டான் சேகர். சோமநாதரும் ''இது நம் பள்ளிகளில் கல்வி போதிக்கப்படும் முறையிலுள்ள குறையால் நடப்பது. அதற்காகத் தான் வீடுகளில் வயதானவர்கள் நல்ல கதைகளைக் கூறும் பழக்கத்தைக் கொண்டிருக்கிறார்கள். உங்களுக்கு ஹரிச்சந்திரனைப் பற்றி முன்பு கூறினேன். தான் என்ற கர்வம் கொள்ளாமல் மக்களுக்குப் பணிபுரிந்த ஜனகர் போன்ற மன்னர்கள் நம் நாட்டில் எவ்வளவோ பேர்கள் இருந்திருக்கிறார்கள். அதிகாரம், அந்தஸ்து, அளவிலா செல்வம் என்றெல்லாம் இருந்தும் சற்றும் கர்வம் கொள்ளாமலும் பிற நாடுகளைத் தம் வசப்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற பேராசை இல்லாமல் வாழ்ந்த பல மன்னர்களைப் பற்றி உங்களுக்குக் கூற முடியும்'' என்றார்.

அப்போது சியாமளா ''எல்லா

'பாரதீயன்'

வசதிகள் இருந்தும் அவற்றைத் தான் மட்டுமே அனுபவிக்க வேண்டுமென நினைக்காமல் மக்கள் நலனையே முதன்மையாகக் கருதும் மன்னன் மிகவும் கஷ்டப்படத்தானே வேண்டும்?'' என்று கேட்டாள். அதற்கு சோமநாதர் ''அவர்களுக்குக் கஷ்டங்கள் இருந்தாலும் அவற்றை எல்லாம் சகித்துக் கொண்டு மக்கள் நலனைத் தான் பேணி வருவார்கள். இதை விளக்கக் கதை கூறுகிறேன் கேளுங்கள்'' என்று கூறிக் கதையை ஆரம்பித்தார்.




ஒரு பௌர்ணமி இரவில் ஞானஸ்ருதி என்ற மன்னன் தன் அரண்மனையின் மேல் தளத்தில் உலாவிக் கொண்டிருந்தான். அப்போது ஆகாயத்தில் பறந்து போய்க் கொண்டிருந்த இரு அன்னப் பறவைகள் ''இந்த அரண்மனையிலிருந்து அதிசயப்படத்தக்க ஒரு ஒளி வீசிக் கொண்டிருக்கிறது. ஆனால் ரைக்வ மன்னரின் அரண்மனையிலிருந்து இதை விட பிரகாசமான ஒளி வீசுகிறது'' என்றன. ஞானஸ்ருதிக்கு பறவைகளின் மொழி தெரியுமாதலால் அந்த அன்னங்கள் என்ன பேசின என அறிந்து கொண்டான். அதன் பிறகு ரைக்வ மன்னனைப் பற்றி விவரமாக விசாரித்து அறிந்து கொண்டு அம்மன்னன் இளைஞன் எனக் கண்டு தன்னை விட உயர்ந்த அவனுக்கு தன் மகளை விவாகம் செய்து வைத்ததோடு தன் நாட்டையே அவனிடம் ஒப்படைத்து விட்டுத் தவம் செய்ய இமயமலைச் சாரலுக்குச் சென்று விட்டான். தன்னை விட ரைக்வ மன்னன் நீதி, நேர்மை, நல்லாட்சி என்பனவற்றில் உயர்ந்து விளங்குபவன் என்பதை அறிந்தே ஞானஸ்ருதி அவ்வாறு செயல்பட்டான். அவனிடம் தான் என்ற கர்வம் இருக்க வில்லை.

இவனைப் போலவே இருந்த இன்னொரு மன்னனைப் பற்றியும் கூறுகிறேன். அவன் பெயர் ஹரி தஸ்வன். அவன் நீதி தவறாமல் நல்லாட்சி புரிந்து வந்தான். அவன் நல்ல இசைக் கலைஞன். மிக இனிமையாகப் பாடுபவன். அவன் காலத்தில் அவனை மிஞ்சிப் பாடக் கூடியவர் யாருமே இருக்க வில்லை. ஒரு நாள் அவன் தன் அரண்மனைப் பூங்காவில் அமர்ந்து பாடிக் கொண்டிருந்தான், அப்போது அங்கு வந்த நாரத முனிவர் அவனது இசையைக் கேட்டு மெய் மறந்து நின்றார். அதன் பின் அவர் பிரம்ம



லோகத்திற்குப் போய் பிரம்மாவிடமும் சரஸ்வதி தேவியிடமும் அந்த மன்னனின் இசைத்திறனைப் புகழ்ந்து கூறினார். அவர்களும் அம்மன்னன் பாடுவதைக் கேட்க வேண்டுமென விரும்பினார்கள். நாரதரும் அதற்கான ஏற்பாடுகளைச் செய்தார்.

ஹரிதஸ்வ மன்னன் பிரம்ம லோகத்திற்குச் சென்றான். பிரம்மா அவனிடம் ''உலகத்தையே பாதுகாத்து வரும் விஷ்ணு பகவான் கொஞ்சம் கூட ஓய்வில்லாமல் அப்பணியில் ஈடுபட்டிருக்கிறார். அவர் தூங்குவது கூட இல்லை. எனவே நீங்கள் பாடினால் அதைக் கேட்டு அவர் மெய் மறந்து தூங்கலாம் அல்லவா?'' என்றார். அதைக் கேட்ட அந்த மன்னன் ''நீங்கள் கூறுகிறபடி நடக்க நான் முயன்று பார்க்கிறேன்'' என்று மிகுந்த அடக்கத்துடன் கூறினான். பிரம்மாவும் அம்மன்னன் பாடுவதைக் கேட்க மகாவிஷ்ணுவை அழைத்து வந்தார். அவனது இசையைக் கேட்ட மகாவிஷ்ணு மெய் மறந்து போய் தூங்கிவிட்டார். அதைக் கண்ட பிரம்மா மிகவும் மகிழ்ந்து போய் ''உங்கள் இசைக்கு இணை எதுவுமே இல்லை. உங்களுக்கு என்ன வரம் வேண்டும் ஆனாலும் அளிக்கிறேன்'' என்றார்

மன்னனும் ''இசையின் பிறப்பிடமே அந்தக் கைலாச நாதரான பரமேஸ்வரன். அவர் பாடுவதை நான் கேட்க வேண்டும். இது தான் நான் தங்களிடம் கோரும் வரம்'' என்றான். பிரம்மாவோ ''தாராளமாகப் பரமேஸ்வரன் பாடுவதைக் கேட்கலாம்'' எனக் கூறினார். அதன் பின் பிரம்மா பரம சிவனிடம் சென்று ஹரிதஸ்வமன்னனின் விருப்பத்தைத் தெரிவித்தார். பரமேஸ்வரனும் பாட ஒப்புக் கொண்டார். அவரது கானத்தைக் கேட்க பிரம்மாவுடனும், மன்னனுடனும் தேவர்கள் அனைவரும் சேர்ந்து கொண்டார்கள்.

பரமேஸ்வரன் சங்கராபரண ராகத்தை ஆலாபனை செய்யலானார். அங்கு கூடி இருந்த அனைவரும் அதனை மெய் மறந்து கேட்டுக் கொண்டிருந்தார்கள். அது முடிந்ததும் கூட மற்றவர்கள் எழுந்தது போலல்லாமல் ஹரிதஸ்வன் தான் இருந்த இடத்தை விட்டு நகராமல்

இருந்தான்.

பிரம்மா அவனிடம் சென்று ''பரமேஸ்வரர் பாடி முடித்து விட்டாரே'' எனவே மன்னன் திடுக்கிட்டு எழுந்து ''முடிந்து விட்டதா? இன்னும் அது முடியவில்லை என்று எண்ணியல்லவா உட்கார்ந்திருந்தேன்'' என்றான். அது கேட்டு பிரம்மா ''கானம் இன்னமும் முடியவில்லை என்று எந்தக் காரணத்தால் நினைத்தீர்கள்?'' என்று கேட்டார்.

அதற்கு ஹரிதஸ்வன் ''சங்கராபரண ராகத்தைப் பாடுபவர் தன் மனதை அலைய விடாமல் ஒரு நிலையில் நிறுத்திப் பாடிக் கொண்டிருக்க வேண்டும். ஆனால்...'' என்று கூறி மேலும் தொடரத் தயங்கினான். அதைக் கேட்ட யாவரும் திடுக்கிட்டனர். மன்னன் கூறியதைக் கேட்ட முக்கண்ணனான பரமேஸ்வரன் தன் மூன்றாவது கண்ணான நெற்றிக் கண்ணைத் திறந்தார்.

மன்னனும் பணிவுடன் அவரை வணங்கி அவர் முன் நின்றான். அப்போது பரமேஸ்வரன் ''இந்த மன்னன் கூறியது உண்மையே. பிரம்மா என்னிடம் வந்து இந்த மன்னனின் விருப்பத்தைக் கூறினார். நானும் ஒரு மனிதன் எப்படித்தான் என் இசையை ரசிக்கப் போகிறானோ என்று என் மனதில் எண்ணியவாறே சங்கராபரண ராகத்தை ஆலாபனை செய்து பாடினேன். அப்போது என் மனம் வேறொரு விஷயத்தையும் நினைத்துக் கொண்டிருந்தது என்பது சரியே. அதனால் தான் நான் பாடியது நிறைவாக இல்லை என்று இந்த மன்னன் எண்ணியது முற்றிலும் சரியே. அதனை அஞ்சாமலும் கூறியதும் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சியையே அளிக்கிறது'' என்றார்.

பரமேஸ்வரனின் நெற்றிக் கண்ணிலிருந்து வெளிவந்த சக்தி அம்மன்னனின் உடலில் சென்று அவனை மேலும் சக்தியுடையவனாக ஆக்கியது. (தொடரும்)





# பெரியண்ணனின் பெட்டகம்

அண்ணூரில் பெரியண்ணன் வட்டிக்கடை வியாபாரி. அந்த ஊரில் கல்யாணம் கார்த்திகை என்று எதற்கும் யாருக்காவது பணம் தேவைப் பட்டால் பெரியண்ணனிடம் போய்த் தான் கடன் வாங்கியாக வேண்டும். கடன் வாங்குபவனின் தேவையையும் அவசரத்தையும் பொறுத்து ஒரு வட்டியோ அல்லது இரண்டு வட்டியோ என்று சொல்லிப்பணம் கொடுப்பான். இப்படி அநியாய வட்டியை அவன் வாங்குவதை ஊரார் திட்டினாலும் சமயத்திற்கு அவன் பணம் கொடுக்கிறானே என்று எண்ணி ஆறுதல் அடைவார்கள்.

பெரியண்ணனின் வீட்டில் ஒரு இரும்புப் பெட்டகம் அவனுடைய தாத்தா காலத்திலிருந்து இருந்து வந்தது. அதில் பெரியண்ணன் தான் சம்பாதித்த பணத்தையும் கடன் காரர்களால் மீட்க முடியாமல் போன நகைகளையும் வைத்துப் பூட்டி அப் பெட்டகத்தின் சாவியைத் தன் இடுப்பில் கட்டிச் சொருகி வைத்திருப்பான். பெட்டகத்தில் என்ன இருக்கிறது என்று அவன் மனைவி பெரிய நாயகிக்குக் கூடத் தெரியாது.

ஒரு நாள் வீடு திரும்பிய பெரிய நாயகி கணவனிடம் "நீங்கள் சம்பாதித்ததை எல்லாம் பெட்டகத்தில் வைத்துப்பூட்டி விடுகிறீர்களே. எனக்குப் பட்டுப்புடவையோ தங்க நகைகளோ வாங்கிக் கொடுக்கக் கூடாதா? இன்று பெட்டகத்தைத் திறந்து எனக்கு அதில் என்ன இருக்கிறது என்று காட்ட வேண்டும். அப்படிக் காட்டாவிட்டால் எந்த ஆற்றிற்கோ குளத்திற்கோ போய் அதில் விழுந்து உயிரை விட்டு விடுவேன்" என்று பயமுறுத்தினாள்.

பாபநாசம் சாமா



திடீரெனத் தன் மனைவி வந்து இவ்வாறு பயமுறுத்தியதைக் கேட்ட பெரியண்ணன் உண்மையிலேயே அவள் அப்படிச் செய்து விடுவாளோ எனப் பயந்து "பெரியநாயகி! பெட்டகத்தைத் திறந்து காட்டுகிறேன். ஆனால் அதைப் பார்த்த பின் அதில் கண்டதை நீ யாரிடமும் ஒரு வார்த்தை கூடச் சொல்லக்கூடாது" என்றான். அவளும் அதற்குச் சம்மதிக்கவே பெரியண்ணனும் பெட்டகத்தைத் திறந்து காட்டினான்.

பெட்டகத்தில் தங்க நாணயங்களும் தங்க நகைகளும் பாதிக்கும் மேல் நிறைந்திருப்பதைக் கண்ட பெரியநாயகி "இவ்வளவு இருந்துமா எனக்கு ஒரு நகை கூடக் கொடுக்காமலும் ஒரு பட்டுப்புடவை கூட வாங்கிக் கொடுக்காமலும் இருக்கிறீர்கள்?" என்று ஆத்திரத்துடன் கேட்டாள். பெரியண்ணனும் "அடி அசடே! கொஞ்சம் பொறுமையாக இரு. இந்தப் பெட்டகத்தின் மீதப் பாதிப்பாகமும் தங்க நாணயங்களாலும் தங்க நகைகளாலும் நிறைந்த பின் இவற்றை எடுத்துக் கொண்டு நாம் அயல் நாட்டிற்குப் போய் சுகமாக வாழப் போகிறோம்" என்றான்.

அது கேட்டு பெரியநாயகி "இது எப்போது நிறையும்?" எனவே பெரியண்ணனும் "இன்னும் மூன்று மாதங்களில் நிறைந்து விடும். அது வரை நம் திட்டம் பற்றி யாரிடமும் மூச்சுக் கூட விடாதே" எனக் கூறி சமாதானப் படுத்தி விட்டான்.

அன்று மாலையே பெரியண்ணன் பெரியநாயகியை அழைத்துக் கொண்டு மகாலட்சுமி கோவிலுக்குப் போனான். அவன் சன்னதியில் நின்று "லஷ்மி தேவி! உன் கிருபை எனக்கு என்றென்றும் இருக்கும்படி அருள் புரிய வேண்டும்" என்று வேண்டிக் கொண்டிருந்தான்.

அப்போது அரசாங்க வீரர்கள் போன்ற முறுக்கு மீசையுள்ள இரு முரட்டுப் பேர்வழிகள் அங்கு வந்து கோவில் அர்ச்சகரிடம் "ஏன் சாமி! ஒரு அழகான இளம் பெண் இங்கு வந்தாளா? ஒல்லியாக எலுமிச்சம் பழ நிறத்தில் இருப்பாள். மேலுதட்டின் பக்கத்தில் அவள் முகத்தில் நன்கு தெரியும் மச்சமும் இருக்கும்" என்று கேட்டார்கள்.

அர்ச்சகரும் "நீங்கள் கூறுகிற அடையாளங்களுள்ள இளம் பெண் யாரும் இங்கே வரவில்லையே. யார்

அந்தப் பெண்?" என்று கேட்டார். அவர்களும் "அவள் இந்நாட்டு இள வரசி. அவள் காட்டிற்குப் போன போது ஒரு வேடுவ இளைஞனைக் கண்டு அவனை விரும்பினாள். இதைத் தன் தந்தையிடம் அவள் தெரி விக்கவே, மன்னன் அதற்கு இணங்க வில்லை. அதனால் அரசகுமாரி நேற் றிரவு யார் கண்ணிலும் படாமல் அரண்மனையிலிருந்து ஓடி விட் டாள். அவள் இப்பகுதியில் தான் எங்கோ ஒளிந்திருக்க வேண்டும். அவளைக் கண்டு பிடித்துத் தன்னிடம் ஒப்படைப்பவருக்கு மன்னர் லட்சம் பவுன்கள் கொடுப்பதாக அறிவித்தி ருக்கிறார்" என்று கூறிவிட்டுச் சென் றார்கள். இதைப் பெரியண்ணனும் பெரியநாயகியும் கேட்டார்கள். அந்த முரட்டு மனிதர்கள் கோவிலிருந்து போன பிறகு அவர்களும் அங்கிருந்து தம் வீட்டிற்குச் சென்றார்கள். அவர்கள் சாப்பிட்ட பின் படுத்துத் தூங்க முயன்றார்கள். பெரியண் ணனுக்குத் தூக்கமே வரவில்லை. அந்த அரசகுமாரியைத்தான் கண்டு பிடித்து மன்னனிடம் ஒப்படைத்தால் தனக்கு லட்சம் பவுன்கள் கிடைக் குமே, அது நடக்குமா என்று எண்ணி யவாறே படுக்கையில் படுத்துப் புரண்டு கொண்டிருந்தான்.

நடுராத்திரியான போது யாரோ தன் வீட்டுக் கதவைத் தட்டுவதை பெரிய ண்ணன் கேட்டான். உடனே எழுந்து போய்க் கதவைத் திறந்து பார்த்தான். ஒரு இளம் பெண். ஒல்லியான உருவம். எலுமிச்சம்பழ நிறம்.



முகத்தில் மேலுதட்டின் பக்கம் தெளி வான மச்சம். அவளைக் கண்டதும் பெரியண்ணன் அவளே அரசகுமாரி என்று தீர்மானித்தான். ஏனெனில், கோவிலில் அந்த முரட்டு வீரர்கள் சொன்ன அடையாளங்கள் எல்லாம் அந்த இளம் பெண்ணிடம் இருந்தன.

அந்தப் பெண்ணும் "நான் துணை இல்லாமல் வந்து விட்டேன். இன் றிரவு உங்கள் வீட்டில் தங்க அனு மதிப்பீர்களா? காலையானதும் போய் விடுகிறேன்" என்றாள். பெரியண் ணனும் அரசகுமாரி வசமாகத் தன் னிடம் வந்து மாட்டிக் கொண்டாள் என்று எண்ணி மகிழ்ந்து போய் "வா ம்மா! தாராளமாக இடம் கிடைக்கும். இரவில் இங்கேயே இருந்துவிட்டு காலையானதும் நீ உன் வீட்டிற்குப் போகலாம்" என்று கூறி வீட்டிற்குள் அழைத்துச் சென்றான்.




இதற்குள் பெரியநாயகி எழுந்து வரவே பெரியண்ணன் அவளைச் சற்றுத் தொலைவில் அழைத்துச் கொண்டு போய் "வந்திருக்கும் பெண் யார் தெரியுமா? அரசகுமாரி. இவள் தப்பிப் போய் விடாமல் பார்த்துக் கொள். நான் அரண்மனைக்குப் போய் வீரர்களை அழைத்து வருகிறேன். இவளை மன்னனிடம் ஒப்படைத்தால் நமக்கு லட்சம் பவுன்கள் கிடைக்கும்" என்று கூறி அந்தப் பெண்ணைத் தன் மனைவியிடம் ஒப்படைத்து விட்டுச் சென்றான்.

வீட்டை விட்டு வெளியே வந்த அவன் குப்பண்ணனை எழுப்பி "வண்டியைக் கட்டு. இப்போதே அரண்மனைக்குப் போக வேண்டும்" என்றான். பெரியண்ணனிடம் அவன் கடன் பட்டிருந்ததால் மறுபேச்சு பேசாமல் வண்டியை கொண்டு வரவே பெரியண்ணன் அதில் ஏறி உட்கார்ந்து கொண்டான். குப்பண்ணனும் வண்டியை ஓட்டிக் கொண்டு சென்றான். ஒரு மணி நேரம் வண்டி போனதும் ஓரிடத்தில் அது நிற்க வேண்டியதாயிற்று. ஏனெனில் முன்னால் பல வண்டிகள் போகாமல் நின்றிருந்தன. வழியில் ஆற்றில் வெள்ளம் வந்து விட்டதாம். எந்த வண்டியும் தலைநகருக்கு அப்போது போக முடியாதாம்.

அப்போது குப்பண்ணன் "இன்னமும் ஒரு மணி நேரம் காத்திருந்தால் வெள்ளம் வடிந்து விடும். அப்போது தலைநகருக்குப் போய்ச் சேரலாம்" என்றான். பெரியண்ணன் சற்று யோசித்து விட்டு "வேண்டாம் குப்பண்ணா! நாம் நம் ஊருக்கே திரும்பிப் போய்விடலாம்" எனவே குப்பண்ணன் வண்டியைத் திருப்பி

அண்ணூருக்கு ஓட்டினான்.

வண்டி வீட்டை அடைந்ததும் பெரியண்ணன் அதிலிருந்து இறங்கிப் பார்த்த போது அவன் திகைத்து நின்றான். ஏனெனில், வீட்டு வாசல் கதவு திறந்து கிடந்தது. உள்ளே ஓடிப்போய் பார்த்த போது பெரிய நாயகி எங்கும் காணப்பட வில்லை. ஒரு அறைக்குள் யாரோ முக்கி முனகும் சத்தம் கேட்கவே பெரிய ண்ணன் அந்த அறைக்புச் சென்றான். அது வெளிபுறம் தாளிடப்பட்டிருக்கவே தாளை விலக்கி கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்றான். பெரியநாயகி கை கால்கள் கட்டப் பட்டு வாயில் துணி அடைக்கப் பட்டுக் கிடந்தாள்.

பெரியண்ணன் அவள் வாயிலிருந்த துணியை எடுத்து விட்டு கை கால்களை அவிழ்த்து விட்டான். பிறகு அவளிடம் "என்ன நடந்தது? அரசகுமாரி எங்கே?" என்று கேட்டான். பெரியநாயகியும் "அரசகுமாரியா அவள்? கொள்ளைக்காரி. அந்த இரண்டு முரட்டு மீசைக்காரர்களும் அரசாங்க வீரர்களல்ல. அவளோடு சேர்ந்த கொள்ளைக்காரர்கள். என்னை இப்படிக் கட்டிப் போட்டு விட்டு நம் பெட்டகத்தைத் தூக்கிக் கொண்டு போய் விட்டார்கள். தங்கக் காசுகளும் நகைகளும் பறிபோயினவே" என்று கதறி அழுதாள்.

பெரியண்ணனின் தலையே சுழன்றது. சற்று நேரம் கழித்து அவன் "வாயையும் வயிற்றையும் கட்டி பணம் சேர்த்ததில் என்ன கண்டேன்? இனிமேல் அப்படிச் செய்ய மாட்டேன். இன்னமும் வசூலாக வேண்டியது நிறைய இருக்கிறது. அவற்றில் கிடைப்பதைக் கொண்டு வாழலாம். நல்ல துணிமணிகள் வாங்கி உடுத்திக் கொள்ளவோம்.

உனக்கு நகைகளையும் வாங்கிக் கொடுக்கிறேன். வித விதமாக சமைத்துப் போடு. நன்றாகச் சாப்பிட லாம். ஆமாம். இனிமேல் பெட்டகமோ அல்லது இரும்புப் பெட்டியோ வாங்கப் போவதில்லை. அதனால் நிம்மதியாக இருக்கலாம்" என்றான்.

பெரியநாயகியின் முகம் மலர்ந்தது.



# எங்கும் தூய்மை

**இயற்கையைக் காத்து
உங்களைக் காக்கவும்**

புதுடில்லியில் இந்திரா காந்தி சர்வதேச விமான நிலயத்தில் ஐந்து ஆண்டுகளுக்குப் பின் வந்து இறங்கிய சித்தார்த்தன் ''ஆகா! தாய்நாட்டிற்கு வந்து விட்டேன். வீட்டிற்குப் போவேன். அங்கே அருகிலுள்ள பூங்காவில் உலாவுவேன். பசுமை நிறைந்து குளிர்ந்த அந்த இடம் தான் எவ்வளவு சுகமானது'' என எண்ணினாள்.

வட அமெரிக்கா கரோலினா பல்கலைக் கழகத்தில் தன் ஐந்து வருடப் படிப்பை முடித்து விட்டு இந்தியா திரும்பிய சித்தார்த்தனை வரவேற்று வீட்டிற்கு அழைத்துச் செல்ல அவனது பெற்றோர்கள் விமான நிலையத்திற்கு வந்திருந்தார்கள்.

அவர்கள் காரில் ஏறி அமர்ந்ததும் அது அவர்கள் வசிக்கும் பட்பட்கஞ்சு காலனிக்குள் நுழைந்து வீட்டின் முன் நின்றது. என்ன இது! இதுவா நான் முன்பு இருந்த இடம் என்று சித்தார்த்தன் திகைத்தவாறே காரிலிருந்து இறங்கினான். ஆனால் அப்பகுதியில் தான் ஓடி, ஆடி விளையாடிய பெரிய ஆலமரத்தை அவன் காணவில்லை.



வண்ண வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கிய செடிகளில் ஒன்றைக் கூட அவன் பார்க்க முடியவில்லை. எங்கு பார்த்தாலும் குப்பை கூளம். ஈக்கள் மொய்த்துக் கொண்டிருந்தன.

அப்போது தன் வீட்டிலிருந்து குப்பையை எறிய வந்த திருமதி வந்தனா சர்மா அதைக் குப்பைத் தொட்டியைச் சுற்றிலும் வீசி எறிந்து விட்டு சித்தார்த்தனை பார்த்து ''இப்போது தான் வருகிறாயா?'' என்று கேட்டு விட்டுச் சென்றாள். சித்தார்த்தன் அவள் இவ்வாறு செய்வாள் என்று சற்றும் எதிர் பார்க்கவில்லை. மேலும் அங்கிருந்த வீட்டுச் சுவர்கள் பாசி படர்ந்து தூசு படிந்து இருப்பதை அவன் கண்டான். அவனால் வெகு நேரம் அங்கு இருக்க முடியவில்லை. வீட்டிற்குள் சென்று விட்டான்.

வீட்டிலும் அவன் மகிழ்ச்சியாக இருக்க முடியவில்லை. தூசி பறந்து வந்து மூக்கில் நுழைய, அவன் 'அச் அச்' சென்று தும்மினான். அவனது தந்தையோ ''கவலைபடாதே. இந்த சூழ்நிலை உனக்கு நான்கு நாட்களில் பழகிப் போய் விடும்'' என்றார். மதிய உணவை அவனது தாயார் பரிமாறிய போது அவளது கைகளில் பொரி பொரியாக சிறு கொப்புளங்கள் இருப்பதைக் கண்டான். ''இதென்னம்மா?'' என்று அவன் கேட்ட போது அவள் ''இது ஒன்றுமில்லை. இரண்டு நாட்களில் சரியாகி விடும்! டில்லியில் எல்லோருக்கும் இந்த மாதிரி வருவது சகஜமே'' என்றாள்.

அன்றிரவே சித்தார்த்தனுக்குத் தூக்கமே வரவில்லை. நள்ளிரவில் தன் தந்தையின் அறையில் பேச்சுக் குரல் கேட்கவே அவன் அங்கு சென்றான். அவனது தாயார் அவனது தந்தைக்கு ஏதோ மருந்தைக் கொடுத்துக் கொண்டிருந்தாள். அவனது தந்தை ஆஸ்துமா காரணமாக மூச்சு விடத் திணறிக் கொண்டிருந்தார்! இதையெல்லாம் கண்ட சித்தார்த்தன் இனியும் தான் செயல்படாமல் இருப்பது சரியல்ல என்று நினைத்தான்.

மறுநாள் காலை அவன் தன் தந்தையிடம் ''அப்பா! நான் அமெரிக்கா

**மாசுற்ற காற்று**

உலகிலேயே மாசுற்ற காற்றையுடைய நகரங்களில் நான்காவது இடம் பெற்றுள்ளது புதுடில்லி என்பது தெரியுமா?



## துயரக்கதை



தாய்லாந்தில் தொழிற்சாலைப் பகுதிகளில் மழை நீர் கூட அமிலமாக மாறி விழுகிறது. அதனால் மழைத் தண்ணீர் பிடித்து வைத்துக் கொள்பவர்கள் மழை பெய்ய ஆரம்பித்து ஒரு மணி நேரத்திற்குப் பிறகே மழை நீரைப் பிடிப்பது ஆரோக்கியத்திற்குஏற்றது என அந்நாட்டு சுகாதாரத்துறை அறிவுறுத்துகிறது.



விற்கே போய் விட எண்ணுகிறேன். அங்கே எனக்கு ஒரு நல்ல வேலை காத்துக் கொண்டிருக்கிறது. இந்த குப்பைக் கூளங்களுக்கு மத்தியில் இங்கே இருப்பதை விட அங்கே போய் விடுவதே மேல்'' என்றான். அதைக் கேட்டு அவனது தந்தையும் தாயும் திகைத்தனர். அவர்கள் தம் மகன் டில்லியிலேயே ஒரு நல்ல வேலை பார்த்துக் கொண்டு தங்களை கவனித்துக் கொள்வானென்று எண்ணினார்கள். அவனிடம் அமெரிக்காவிற்குப் போக வேண்டாமென்று கூறிப்பார்த்தார்கள். அவனோ பிடிவாதமாக அங்கே போய் விடுவதாகக் கூறினான்.

''நீங்கள் சுற்றுப் புறத்தை சுத்தமாக வைத்துக் கொண்டால் ஆஸ்துமா போன்ற நோய்கள் வராமல் தடுக்கலாமே. முன்பெல்லாம் இங்கு மரங்களும் செடிகளும் இருந்து நல்ல காற்றும் வீசியது. இப்போதோ எங்கும் தூசி. வெளியே தலைநீட்ட முடியவில்லை. அம்மாவின் கையில் பொரி பொரியாக இருப்பதும் இந்த தூசி நிறைந்த காற்றால் தான். இப்படி மாசு படிவதை எல்லாம் தடுக்க வேண்டாமா?'' என்றான். அவனது தந்தையும் ''நாங்கள் மட்டும் இதைச் செய்தால் போதுமா? மற்றவர்களும் செய்ய வேண்டாமா? நீ தான் தினமும் பார்க்கிறாயே. தினமும் வந்தனா சர்மா குப்பையை தொட்டிக்குள் போடாமல் அதைச் சுற்றிலும் பரவலாக வீசுகிறாளே'' என்றார்.

சித்தார்த்தனும் யோசித்து ஒரு முடிவிற்கு வந்தான். அன்று மாலை அவன் சில சிறுவர்களை அழைக்கவே அவர்களும் அமெரிக்க மாமா என்று கூவியவாறே ஓடி வந்தார்கள். சித்தார்த்தனும் ''உங்களுக்குக்கெல்







லாம் நான் அமெரிக்காவிலிருந்து கொண்டு வந்துள்ள சாக்லெட்டைக் கொடுப்பேன் அதற்காக நீங்களெல் லாம் நான் சொல்கிறபடி நடப்பீர் களா? அப்படி நடந்தால் நம் ஊரும் அமெரிக்க நகரம் போல சுத்தமாக இருக்கும்'' என்றான்.

அவர்களும் ''செய்கிறோமே. சாக் லெட்டும் கிடைக்கிறது. நம் காலனி யும் அமெரிக்கா ஆகப் போகிறது'' என்றார்கள் உற்சாகமாக. தினமும் குப்பைகளை எடுத்து குப்பைத் தொட்டிகளில் போடுவது; காலனி யின் தெருக்களை சுத்தமாகப் பெருக் குவது. தெரு ஓரங்களில் மலர்ச் செடிகளை நடுவது, அவற்றிற்குத் தண்ணீர் விடுவது என்பன அவர்கள் செய்த வேலைகள். தினமும் மாலை யில் ஒரு மணி நேரம் சித்தார்த்தனும் சிறுவர்களும் இந்த வேலைகளைச் செய்யவே காலனியின் இளைஞர் களும் அவர்களோடு சேர்ந்து வேலை செய்தார்கள். பதினைந்தே நாட்களில் புதிய தோற்றம் பெற்றுப் பொலி வுடன் விளங்கியது. யாரும் தெருக் களில் குப்பைகளைக் கொட்டாமல் குப்பைத் தொட்டிகள் வரை நடந்து போய் அவற்றுள் கொட்டினார்கள். வந்தனா சர்மாவும் தன் பழக்கத்தை மாற்றிக் கொண்டுவிட்டாள். காலனி யில் ஈ, கொசுத் தொல்லை இல்லை.

அது கண்டு யாவரும் சந்தோஷப் பட்டார்கள். யாவருக்கும் தம் காலனி யையும் சுற்றுப்புறத்தையும் சுத்தமாக வைத்துப் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் வந்து விட்டது. எனவே, எங்கு பார்த்தாலும் சுத்தமாக இருந்தது. சித்தார்த்தனும் தன் பெற்றோர்களிடம் ''நான் அமெரிக்கா போகவில்லை. நம் காலனியையே அமெரிக்காவாக மாற்றி விட்டேன்'' என்றான் பெருமிதத்துடன்.

கோ. வித்யா

சிரிக்கக் கூடிய விஷயமல்ல!





# வாழ்க்கை மீண்டும் மலர்கிறது

## இயற்கையைக் காத்து உங்களைக் காக்கவும்




விஜய் வேகவேகமாகத் தன் நாய்க் குட்டி மணியைத் தூக்கிக் கொண்டு ஓடினான். தன் அருமை நாய்க்குட்டி மூச்சு விடத் திணறி வாயிலிருந்து நுரை கக்குவதைக் கண்டு அவனுக்கு அழுகை பீறிக்கொண்டு வந்தது. அவன் மிருக வைத்தியர் சுந்தரின் மருத்துவமனைக்குள் சென்று ''டாக்டர்! என் மணிக்கு என்ன ஆயிற்று என்று பாருங்கள். திடீரென்று இது சுருண்டு விழுந்து நுரையைக் கக்கிக் கொண்டிருக்கிறது'' என்று கெஞ்சினான்.

டாக்டரும் அதைப் பார்த்து விட்டு ''இதன் உடலில் விஷம் போயிருக்கிறது. இது எதைத் தின்றது? என்ன குடித்தது?'' என்று கேட்டார். மணியும் ''விஷமா? யாரும் அப்படி எதுவும் இதற்குக் கொடுக்க மாட்டார்கள். இது எல்லோருக்கும் பிரியமானதாயிற்றே! சற்று முன் ஆற்றங் கரையில் நாங்கள் விளையாடிக் கொண்டிருந்தோம். அப்போது இது ஆற்றின் நீரைக் குடித்தது'' என்றான்.

அது கேட்டு டாக்டர் ''சரி தான்.

ஆற்று நீரை இது குடித்ததால் தான் இப்படி ஏற்பட்டுள்ளது. இவ்வூர் தொழிற்சாலையிலிருந்து ஆற்றில் விடப்படும் கழிவுப் பொருள்களால் ஆற்று நீரின் தூய்மை கெட்டு விஷப் பொருளை கலந்து விட்டது. முன்பு நான் சொன்னதை யாரும் கேட்காத தன் பலன் இது'' என்றார் வருத்தப் பட்டவாறே. பிறகு அவர் விஜயின் நாய்க்குட்டிக்கு சில மாத்திரைகளைக் கரைத்துக் குடிக்க வைத்தார். ஊசியும் போட்டார். ஆனால் நாய்க்குட்டி இறந்து விட்டது. விஜய் அழுது கொண்டே அதைத் தூக்கிக் கொண்டு தன் வீட்டிற்குச் சென்றான்.

டாக்டர் சுந்தர் மனதில் ''இனியும் சும்மா இருக்கக் கூடாது. ஆற்று நீரைக் குடித்து ஒரு நாய் செத்தது என்றால் நாளை அதே நீரைக் குடித்த மனிதன் சாகாமலா இருப்பான்? இந்த ஊராரி டம் இதை விளக்கிக் கூறி இதற்கு ஒரு வழி காண வேண்டும்'' எனத் தீர் மானித்துக் கொண்டார்.

ஒரு வருடத்திற்கு முன் அவ்வூரின் ஆற்றங்கரையோரமாக பனியன் தொழிற்சாலையை அமைக்க முயன்ற போது டாக்டர் சுந்தர் சில இளைஞர் களைச் சேர்த்துக் கொண்டு அத்திட் டத்தை எதிர்த்தார். ஆனால், விஜயின் தந்தை தன் பணபலத்தால் ஊரார் தன்னை ஆதரிக்கச் செய்ததோடு அவர் களது நல்ல விளைக்களன் நிலங் களை வாங்கித் தொழிற்சாலையை ஆரம்பித்தார். தம் நிலங்களுக்கு நல்ல விலை கிடைத்ததாலும் அந்த ஊரார் தாம் செய்து வந்த விவசாயத்தையும்



**பயங்கரத் தீ**



ஆறு பற்றி எரிகிறதா? இது நம்ப முடியாதது தான். ஆனால் உண்மையிலே இப்படியும் நடந்தது. ஒஹியோவின் கிளீஸ்லாண்டில் பாயும் குயாஹோகா நதி 1969ல் தீப்பற்றி எரிந்தது. அந்நகரம் தொழில்கள் நிறைந்தது. அங்குள்ள தொழிற்சாலைகள் தம் ரசாயனக் கழிவு நீரை அந்த ஆற்றில் விட்டுக் கொண்டே இருந்தன. இது பல ஆண்டுகளாக நடந்து கொண்டே இருந்த போதிலும் யாரும் கண்டு கொள்ளவே இல்லை. இப்போது கழிவுகளால் மாசு படுத்தப்பட்ட அந்த ஆறு பற்றி எரியக்கூடிய அபாயநிலையில் உள்ளதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

விட்டு விட்டுத் தொழிற்சாலையில் வேலை செய்யச் சென்று விட்டனர்.

தொழிற்சாலை ஆரம்பிக்கப்பட்டு அது இயங்கியதும் அதிலிருந்து ரசாயனக் கழிவுப் பொருள்கள் ஆற்றில் விடப்பட்டன. அதனால் ஆற்று நீரின் நிறம் மாறி அதன் சுவையும் முற்றிலும் வேறாகிவிட்டது. ஆனால் அந்த ஊரார் அது பற்றிக் கவலைப்படவில்லை. நமக்கு நிறையப் பணம் கிடைக்கிறதே என்று எண்ணி எதுவும் பேசாமல் இருந்து விட்டனர்.

ஆற்று நீரில் ரசாயனக் கழிவுகள் கலந்து நீரின் நிறம் மாறியதால் துணிகளைத் துவைக்க முடியவில்லை. ஆற்று மீன்கள் இறந்து போயின. அந்த நீரைக் குடித்த பறவைகளும் மிருகங்களும் சுருண்டு விழுந்தன. இதனால் சலவைத் தொழிலாளிகளுக்கும் மீனவர்களுக்கும் வருமானம் இல்லாது போயிற்று.

அந்த நீரைப் பயன்படுத்தியதால் ஊரார்க்குப் பல வித நோய்கள் பற்றின. உடல், தோலில் சொறி, சிரங்கு, புண்கள் எனப்பலர் அவஸ்தைப்பட்டனர்.

இப்படியெல்லாம் வருமென டாக்டர் சுந்தர் பலமுறை அவ்வூராருக்கு எடுத்துக் கூறியும் அவர்கள் அந்த எச்சரிக்கையை அலட்சியப் படுத்தினார்கள். ஆனால் விஜயின் நாய்க்குட்டி ஆற்று நீரைக் குடித்ததால் இறந்தது எனக் கண்டதும் எல்லோரையும் பயம் பற்றிக் கொண்டது. இனியும் தாமதிக்கக் கூடாதென டாக்டர் சுந்தர் தம்முடன் சில இளைஞர்களைக் கூட்டிக் கொண்டு விஜயின் தந்தையைக் காண அவரது வீட்டிற்குச்







சென்றார்.

அவர் தொழிற்சாலையிலிருந்து வெளியேறும் ரசாயனக் கழிவு நீரை சுத்தப்படுத்தி அதையே தொழிற் சாலையில் உபயோகிக்கும்படி விஜ யின் தந்தையிடம் வற்புறுத்தினார். தொழிற்சாலையின் ரசாயனக் கழிவு நீர் ஆற்றில் கலந்ததால் ஆற்று நீர் விஷமயமாக அசுத்தமானதை எடுத் துக் கூறினார். அந்த நீரைக் குடித்து முதலில் பலியானது விஜயின் நாய்க் குட்டி என்பதையும் சுட்டிக் காட்டினார்.

அதை எல்லாம் தன் தந்தையுடன் கேட்டுக் கொண்டிருந்த விஜய் ''அப்பா! டாக்டர் கூறியது போல உங்கள் அடாத செயலால் இன்று என் நாய்க்குட்டி இறந்தது. நாளை எத்தனை மனிதர்கள் சாவார்களோ!'' என்று கூறி ஒவென அழுதான். விஜயின் தந்தையோசிக்கவே விஜய் ''அப்பா! என் நாயைக் கொன்ற கொலைகாரர் நீங்கள். இனி எவ்வளவு பேர்களை இப்படிக் கொன்று என் னையும் கொல்லப் போகிறீர்களோ?'' என்று கேட்டான். டாக்டர் சுந்தர் விஜயை சமாதானப்படுத்தி ''கவலைப்படாதே. இனியும் இம் மாதிரி நேராமல் உன் தந்தை நான் சொன்ன யோசனைப்படி நடந்து பார்த்துக்கொள்வார்'' என்றார்.

விஜயின் தந்தையும் ''ஆமாம் விஜய். இப்போது என் தவறை உணர்ந் தேன். டாக்டர் கூறியபடியே எல்லாம் செய்கிறேன். இனி ஆற்று நீரில் என் தொழிற்சாலையின் கழிவு நீர் விழாது. அதை சுத்தப்படுத்திப் பயன்படுத்து வேன் இனி ஆறும் சுத்தமாகி விடும்'' என்றார். அதன்படியே அவர் நடக்க அவ்வூரார் உடல் நலம் குன்றாமல் வாழலாயினர்.

சுகேசினி

சிரிக்கும் விஷயமல்ல!





# அஞ்சா நெஞ்சன்

ஒரு காட்டில் காலபைரவி என்ற மந்திரக்கிழவி இருந்தாள். அவள் மிகவும் கொடூரமானவள். அக்காட்டு வழியே வரும் மனிதர்களைப் பிடித்து அவர்களைக் கொன்று களிப்பவள். அவளது இருப்பிடம் ஒரு குகை, அதற்குள் தான் கொன்ற மனிதர்களின் எலும்புக் கூடுகளை நிறுத்தி வைத்து அவற்றின் மத்தியில் தான் படுத்துத் தூங்குவாள்.

ஓராண்டிற்கு முன் அந்தக் காட்டிலிருந்து கொஞ்ச தூரத்திலுள்ள கிராமத்தைச் சார்ந்த பாலய்யன் என்ற இளைஞன் அந்தக் காட்டின் வழியே சென்று கொண்டிருந்தான். காலபைரவி அவனைப் பிடித்து கொன்று அவனது எலும்புக் கூட்டைத் தன் குகைக்குள் வைத்து விட்டாள். இதை அறிந்தபின் அக்கிராமத்தவர்களில் யாருமே அக்காட்டு வழியே செல்லவில்லை.

பாலய்யனுக்கு வீரய்யன் என்ற அண்ணன் இருந்தான். அவனை அஞ்சா நெஞ்சன் என்று பெயரிட்டு அழைத்து வந்தனர். அவன் காட்டிலுள்ள காலபைரவியை ஒழித்து விடுவது என்ற தீர்மானத்தோடு அங்கே சென்றான். அப்போது அவள் விழுதுகளுள்ள ஆலமரத்தடியே உட்கார்ந்து கொண்டு யாராவது ஒரு மனிதன் அவ்வழியே வருவானா என்று பார்த்துக் கொண்டிருந்தாள். அப்போது வீரய்யன் வருவதைக் கண்டதும் அவள் ஒரேயடியாக மகிழ்ந்து போனாள்.

வீரய்யன் காலபைரவியின் பக்கம் போய் நின்று "என்ன பாட்டி! நலந்தானா?" என்று கேட்டான். மந்திரக் கிழவி அவனை விழுங்கி விடுபவள் போலப் பார்த்து "நலமாக இருப்பதால் தானே இந்த மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு காற்று வாங்கிக்

சா. சோபினி



கொண்டிருக்கிறேன்? பேரப் பயலே! நீ எங்கே போய்க் கொண்டிருக் கிறாய்?'' என்று கேட்டாள்.

அவனும் "பாட்டீ! என் பெயர் வீரய்யன். என்னை ஊரார் அஞ்சா நெஞ்சன் என்று கூப்பிடுகிறார்கள். நான் யாருக்கும் எதற்கும் பயப் படாமல் இருப்பதே இப்பெயர் வரக் காரணம். ஊரில் பல ஆசிரியர்களிடம் எல்லாவற்றையும் கற்றுக் கொண் டேன். ஆனால், பயம் என்றால் என்ன என்று தான் தெரியவில்லை. யாரா வது என்னை பயமுறுத்தி அது என்ன என்று அறிய வைக்கிறார்களா என்று தான் அலைந்து கொண்டிருக் கிறேன். இதுவரை என்னை பயமுறுத்து பவன் யாருமே தென்படவில்லை'' என்றான்.

காலபைரவியும் பயங்கரமாகச் சிரிக்கவே, அவனோ "பாட்டீ! நீ என் னை பயமுறுத்தியா மேலுலகத்திற்கு அனுப்பப் போகிறாய்? நான் என்ன வோ இவ்வளவு நாட்களாக மந்திரக் கிழவி என்றால் பார்க்கவே பயங்கர மாக இருப்பாள் என்றே எண்ணி இருந்தேன். நீயோ மிக அழகாக இருக்கிறாய்.'' என்றான்.

அதைக் கேட்டு காலபைரவி உச்சி குளிர்ந்து போய் "நீ சொல்வது உண் மையா?'' என்று கேட்டாள். வீரய் யனும் "நான் சொல்வதை நம்ப நீயே இந்த முகம் பார்க்கும் கண்ணாடியில் பார்'' என்று கூறித்தன் பையிலிருந்து ஒரு கண்ணாடியை எடுத்துக் கொடுத்தான். அவளும் கண்ணாடி யில் தன் முகத்தைப் பார்த்து விட்டு தான் பேரழகியே என்று எண்ணி மகிழ்ந்தாள்.

அப்போது வீரய்யன் "இது கிடக்கட்டும். முதலில் என்னை பயமுறுத்த முடியுமா பார்'' என்று கூறினான்.

காலபைரவியும் "பொடிப்பயலே! என்னுடன் வா'' என்று கூறி அவன் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு தன் குகைக்குள் சென்றாள். வீரய்யன் அங்கு பல எலும்புக் கூடுகளைப் பார்த்தான். அவற்றில் ஒன்று தான் தன் தம்பியுடையது என்று நினைத்ததும் அவன் கண்களில் நீர் ளததும்பியது.

அப்போது காலபைரவி "பேரப் பயலே! இவர்களை நான் கத்தியால் குத்தியோ அல்லது விஷம் கொடுத் தோ கொல்லவில்லை. இவர்கள் என் பயங்கர உருவத்தைக் கண்டதுமே பயத்தால் இதயத்துடிப்பு நின்று

இறந்து போனவர்கள். இதைத் தெரிந்து கொள்'' என்றாள். அது கேட்டு வீரய்யன் "இவர்களெல்லாம் தொடை நடுங்கிகள் போல் தெரிகிறதே. அதனால் தான் பயந்து உயிர் விட்டிருக்கிறார்கள். நான் அப்படிப் பட்டவனல்ல. என் இதயம் இரும்பு போன்றது" என்றான்.

காலபைரவியும் "பொடிப்பயலே! அவசரப்பட்டு உளராதே" எனக் கூறி ஏதோ மந்திரத்தை உச்சரித்தாள். மறு நிமிடமே அவளது தலை புலியின் தலையாக மாறியது. உடல் ஒரு ராட்சஸக் கழுகினுடையது போல ஆகியது. அது தன் கூரான கால் நகங்களால் வீரய்யனைப் பற்றிக் கொண்டு வானில் பறக்கலாயிற்று. சற்று நேரம் வரை அவ்வாறு பறந்து விட்டு கீழே இறங்கி ஏதோ மந்திரத்தை உச்சரிக்கவே அது பழைய காலபைரவியாக ஆகிவிட்டது. வீரய்யனோ சற்றும் மனம் கலங்காமல் முன்போலவே இருந்தான்.

அதைக் கண்ட காலபைரவி ஆச்சரியப்பட்டு "பயலே! இன்னமுமா நீ உயிருடன் இருக்கிறாய்? என் பயங்கர உருவைக் கண்டு நீ இறந்து போயிருப்பாய் என்றல்லவா நினைத்தேன்'' என்றாள். வீரய்யனும் "உன் இந்தக் கோமாளி வேஷத்திற்கு எல்லாமா நான் பயந்து விடுவேன்? ஏதோ சற்று நேரம் வான வீதியில் என்னுடன் சற்று நேரம் உலாவந்தாய். அவ்வளவு தான்'' என்று சிரித்துக் கொண்டே கூறினான். அது கேட்டு காலபைரவி கோபமும் ஆத்திரமும் கொண்டு,



இன்னொரு மந்திரத்தை உச்சரித்தாள்.

அப்போது வீரய்யன் "பாட்டீ! உனக்கு நிறைய மந்திரங்கள் தெரியும் போல் இருக்கிறதே. இம்முறை என்னை பயமுறுத்தி உன்னால் என்னை எலும்புக் கூடாக ஆக்க முடியாவிட்டால் எனக்கு நீ ஒரு மந்திரத்தைக் கற்று தர வேண்டும். தெரிந்ததா?'' என்றான். அவளும் "நீ மந்திரத்தைக் கற்றுக் கொள்ள இந்தத் தடவை நீ சாகாமலா இருக்கப் போகிறாய்? நீ உயிருடன் இருந்து விட்டால் கற்றுக் கொடுக்கிறேன்'' என்று கேலியாகச் சிரித்தாள்.

இந்த முறை காலபைரவி ஒரு மனித எலும்புக் கூடாக மாறினாள். அதிலிருந்தது பல விஷப்பாம்புகள் சீறிக் கொண்டு வெளியே வந்தன. அது கண்டு வீரய்யன் பலமாகச் சிரித்தான். அவன் இறக்காதது கண்டு கால

பைரவி முன் போலாகி "சரி. சொன்ன படி ஒரு மந்திரத்தை உனக்குக் கற்பிக்கிறன்" என்றாள். வீரய்யனும் "பூ...! எதையும் தேளாக மாற்றும் இந்த உபயோகமற்ற மந்திரமா?" என்று கேட்டான். காலபைரவியும் "ஓகோ! உனக்கு சக்தி வாய்ந்த மந்திரத்தைக் கற்றுக் கொடுக்க நான் என்ன ஏமாந்த சோணகிரியா?" என்று கேட்டாள்.

வீரய்யனும் "நீ ஏமாற மாட்டாய் என்பது தெரியும். நீ இதையே கற்றுக் கொடு" என்றான். அவளும் அந்த மந்திரத்தை கற்றுக் கொடுத்து "நீ எந்த ஒரு பொருளையோ அல்லது ஒரு மனிதனையோ பார்த்து இந்த மந்திரத்தை உச்சரித்தால் அதுவோ அல்லது அவனோ தேளாகி விடுவான்" என்றாள். வீரய்யனும் அப்படியா என ஆச்சரியப்படுபவன் போல காலபைரவியைப் பார்த்தவாறே அந்த மந்திரத்தை உச்சரித்தான்.

மறு வினாடியே அவள் தேளாகி விட்டாள். வீரய்யன் சற்றும் தாமதிக்காமல் அந்தத் தேளைத் தன் காலால் மிதித்து நசுக்கிக் கொன்று விட்டான். கால பைரவி மாற்று மந்திரம் உச்சரிக்க நேரமில்லாமல் அவன் செயல்பட்டதால் அந்த மந்திரக் கிழவி துடிதுடித்து இறந்து போனாள்.

கிழவி இறந்ததும் அவளது குகையிலிருந்த மனித எலும்புக் கூடுகளெல்லாம் உயிருள்ள மனிதர்களாகின. அவர்கள் யாவரும் குகையிலிருந்து வெளியே வந்தார்கள். அவர்களில் வீரய்யனின் தம்பி பாலய்யனும் இருந்தான். வீரய்யன் அவனைக் கட்டித்தழுவியவாறே எல்லோரிடமும் "இனி உங்களுக்கு பயமே இல்லை. காலபைரவி இறந்து கீழே கிடப்பதைப் பார்த்து மகிழுங்கள்" என்றான்.

அவர்கள் ஆச்சரியத்துடன் மந்திரக் கிழவியின் உடலைப் பார்க்கவே வீரய்யன் நடந்ததை எல்லாம் விவரித்துக் கூறினான். அப்போது பாலய்யன் எல்லோரிடமும் "இவன் என் அண்ணன் அஞ்சாநெஞ்சன் வீரய்யன்" எனவே யாவரும் "அஞ்சாநெஞ்சன் நீடுழிவாழ்க" என வாழ்த்தி வணங்கி விட்டுச் சென்றனர்.





# அது தான் நோய்!

பாலுவை அவனது தாயார் மீனாட்சி தான் வளர்த்துப் பெரிய வனாக்கிப் படிக்க வைத்து ஒரு நல்ல உத்தியோகத்திலும் அமர வைத்தாள். சிறு வயதிலேயே தன் தந்தையை இழந்து விட்ட பாலு தாயின் சொல்லைத் தட்டாமல் நல்ல பிள்ளை என்றும் பெயர் பெற்று விட்டான். அவனுக்குப் பெண் கொடுக்கப் பல பணக்காரர்கள் போட்டி போட்டுக் கொண்டு வந்தார்கள்.

ஒரு நாள் மீனாட்சி அம்மாள் கோவிலுக்குச் சென்ற போது அவளை அடுத்த தெரு அலமேலு சந்தித்து ''என்ன மீனாட்சி! உன் மகனுக்குப் பெண் கொடுக்கப் பணக்காரர்கள் போட்டி போடுகிறார்களாமே. வரதட்சணை, சீர் என்றெல்லாம் நிறையக் கொடுப்பதாக அவர்கள் கூறினாலும் நீ ஏமாந்து போய் விடாதே. என் அவஸ்தையைப் பார். என் மகனுக்குப் பணக்கார வீட்டுப் பெண்ணைக் கல்யாணம் செய்து வைத்தேன். அவள் வீட்டில் ஒரு வேலை கூட செய்வதில்லை. என்னையும் மதிப்பதே இல்லை. அதனால் நீ நல்ல ஏழைப் பெண்ணாகப் பார்த்து உன் மகனுக்குக் கல்யாணம் செய்து வை. அப்படிப்பட்ட பெண் தான் அடக்க ஒடுக்கமாக இருப்பாள். வீட்டிலும் நிம்மதி இருக்கும்'' என்றாள்.

அலமேலு சொன்னது மீனாட்சியின் மனதில் நன்கு பதிந்தது. அன்று முதல் ஏழைக் குடும்பப் பெண்களைப் பற்றி விசாரிக்கலானாள். அவ்வூரில் மளிகைக் கடையில் கணக்கு எழுதும் மாணிக்கத்தின் மகள் பார்வதியைப் பற்றி விசாரித்துத் திருப்தி அடைந்தாள்.

மாணிக்கம் தன் பெண்ணிற்கு எப்படித் திருமணம் நடக்கும் என்று எண்ணி திகிலுடன் இருந்தான். மீனாட்சி அவனிடம் பேசி பாலுவுக்கும் பார்வதிக்கும் திருமணத்தைச்

சிவனார் செல்வன்



செய்து விட்டாள்.

பார்வதி மிகவும் நல்லவள். மீனாட்சியைத் தனக்கு வாழ்வளித்த தெய்வமாக வணங்கி அவளிடம் ''இனி நீங்கள் ஒரு வேலையும் செய்ய வேண்டாம். எல்லாம் நானே செய்கி றேன். உங்களுக்கு என்ன வேண்டு மோ அதைக் கேளுங்கள். உடனே செய்து கொடுக்கிறேன்'' என்றாள்.

பார்வதி சமையல் முதல் வீட்டு நிர் வாகம் வரையில் எல்லாவற்றையும் கவனித்துக் கொள்ளவே, மீனாட்சிக்கு செய்வதற்கு ஒரு வேலை கூட இல் லாது போயிற்று. மூன்று மாதம் அப் படியே இருந்ததால் உடல் பருத்துப் போயிற்று. எழுந்து உட்காரும் போது மேல் மூச்சு, கீழ் மூச்சு வாங்கலா யிற்று. அவ்வப்போது இதயம் வேக மாகத் துடிக்கிறது எனக் கூறலானாள். உடலில் தளர்ச்சியும் சோர்வும் ஏற்படு வதாகவும் சொல்லலானாள்.

இதைக் கேட்ட பார்வதியும் பாலு வும் வைத்தியர்களை அழைத்து வந்து காட்டினார்கள். அவர்களும் மீனாட்சி யைப் பரீட்சித்துப் பார்த்து விட்டு அவளது உடலில் எவ்வித நோயும் இல்லை என்று கூறி விட்டுச் சென் றார்கள். மீனாட்சியோ தனக்கு ஏதோ நோய் இருப்பதாயும் தன்னைப் பார்த்த வைத்தியர்களால் அது என்ன என்றும் கண்டு பிடிக்க முடிய வில்லை என்று கூறித் தன் மனத் தாங்கலை வெளிப்படுத்தினாள்.

ஒரு நாள் பாலு தன் தாயாரைப் பட் டணத்தில் புகழ் பெற்ற வைத்திய ரிடம் காட்டி மருந்து வாங்கி வருவ தாக பார்வதியிடம் கூறி விட்டுச் சென் றான். அன்று அவளைக் காண அவளது பெரியப்பாவின் மகன் ராஜன் வந்தான். அவன் பார்வதியிடம் ''எப்படி இருக்கிறது உன் வாழ்க்கை?'' என்று கேட்கவே அவளும் ''எனக்கு ஒரு குறைவும் இல்லை. ஆனால், என் மாமியாருக் குத்தான் ஏதோ நோய்'' என்று கூறி மீனாட்சியைப் பற்றிச் சொன்னாள்.

அதைக் கேட்ட ராஜன் ''கவலைப்படாதே. மூன்று நாட் களுக்கு பிறகு நான் வருகிறேன். அப்போது உன் மாமியாரிடம் நான் ஒரு வைத்தியர் என்று அறிமுகப் படுத்து. உன் மாமியாரின் நோயை நான் போக்கடிக்கிறேன்'' என்று கூறி விட்டுச் சென்றான்.

பட்டணத்திற்குப் போன மறு நாளே மீனாட்சியும் பாலுவும் தம்

ஊருக்குத் திரும்பி வந்து விட்டார்கள். பட்டணத்து வைத்தியரும் மீனாட்சிக்கு ஒரு நோயுமில்லை என்று கூறி விட்டாராம். அதற்கடுத்த நாள் ராஜன் பார்வதியைப் பார்க்க வந்தான். அவளும் அவனைத் தன் மாமியாருக்கு வைத்தியர் என அறிமுகப் படுத்தி "அண்ணா! என் மாமியாருக்கு என்ன நோய் என்று கண்டு பிடித்துச் சொல்லுங்கள்" என்று கேட்டுக் கொண்டாள்.

ராஜனும் மீனாட்சியின் கை நாடியைப் பிடித்துப் பார்த்து "நீங்கள் எழுந்து உட்காரும் போது மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்குகிறதா! அவ்வப் போது இதயம் 'பட் பட்' என்று அடித்துக் கொள்கிறதா? எப்போதும் சோர்வாயும் தளர்ந்து போனது போலவும் உணர்கிறீர்களா?" என்று கேட்டான்.

மீனாட்சியும் "இதெல் லாம் எனக்குள்ள நோயின் அறி குறிகள். நீ நாடியைப் பிடித்தே இவற்றைக் கண்டு பிடித்து விட்டாயே. நீ ஒரு நல்ல வைத்தியன் தான். என் நோய்க்கு மருந்து கொடுக்கிறாயா?" என்று கேட்டாள்.

ராஜனும் சிரித்துக் கொண்டே "ஆகா! கொடுக்கத்தான் போகிறேன். வைத்தியர் என்றிருந்தால் மருந்து கொடுக்காமல் இருப்பாரா? நான் கொடுக்கும் சூரணத்தை தினமும் இரண்டு வேளை சாப்பிட்ட பிறகு ஒரு சிட்டிகை வீதம் எடுத்து உட கொள்ள வேண்டும். இந்த மருநதை



உட்கொண்டு வரும் காலத்தில் தினமும் ஒரு மணி நேரம் தோட்ட வேலை செய்ய வேண்டும். பகலில் நீங்களே சமைத்து எல்லோருக்கும் பரிமாறி நீங்களும் சாப்பிட வேண்டும். மாலையில் கோவிலுக்கு வேக வேகமாகப் போய் சுவாமி தரிசனம் செய்து விட்டுத் திரும்பி வர வேண்டும். இப்படிப் பத்து நாட்கள் தொடர்ந்து செய்தால் நீங்கள் முன் போலாகி விடுவீர்கள். அதன் பிறகும் இப்படியே செய்து வந்தால் உங்களை ஒரு நோயும் அணுகாது. பத்து நாட்களுக்குப் பிறகு வந்து நான் உங்களைப் பார்க்கிறேன்" என்று கூறி சூரணடப்பியைக் கொடுத்து விட்டுச் சென்றான்.

மீனாட்சியும் ராஜன் கூறியதை எல்லாம் செய்து சூர்ணத்தையும் உட்கொண்டாள். பத்து நாட்களானதும் தான் முற்றிலும் குணமடைந்து

விட்டது போல் உணர்ந்தாள். பத்து நாட்களுக்குப் பின் ராஜன் வந்து மீனாட்சியைப் பார்த்து ''எப்படி இருக்கிறீர்கள்?'' என்று கேட்டதும் அவள் தான் முற்றிலும் குணமடைந்து விட்டதாகக் கூறி மகிழ்ந்தாள்.

அவள் அன்று மாலை கோவிலுக்குப் போனதும் ராஜன் பார்வதியிடம் ''மீனாட்சிக்கு இருந்தது மன நோய். தனக்கு ஒரு வேலையும் இல்லையே என்ற கவலை தான் அவள் மனதை அரித்துக் கொண்டிருந்தது. அதை நான் போக்கி விட்டேன்.

நான் கொடுத்த சூர்ணம் வெல்லமும் மிளகும் கலந்த பொடி. என் மீதும் என் மருந்து மீதும் மீனாட்சிக்கு முழு நம்பிக்கை ஏற்பட்டதால் தான் அவள் தனது நோய் போய் விட்டதாக எண்ணினாள்'' என்று சிரித்துக் கொண்டே கூறினான். அதைக் கேட்ட பார்வதி பலமாகச் சிரித்தவாறே ''அது தானே பார்த்தேன்'' நீ எப்போது வைத்திய சாஸ்திரம் படித்தாய் என்று ஆச்சரியப் பட்டுக் கொண்டிருந்தேன். நீ உன் புத்திசாமர்த்தியத்தால் எங்கள் மனதை வாட்டி வந்த பிரச்சினையைத்தீர்த்து வைத்தாய்'' என்றாள்.

அவர்கள் இருவரும் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டுக் கொண்டே வீட்டினுள் வந்த பாலு ''சபாஷ் ராஜன்! நல்ல வேலை செய்தாய். என் தாயார் தனக்கு ஏதோ வியாதி இருப்பதாக உறுதியாக நம்பினாள். அவளைப் பார்த்த வைத்தியர்களெல்லாம் அவளுக்கு எந்த வித நோயுமில்லை எனக் கூறி மருந்தும் கொடுக்காமல் போகவே, அவளுக்கு அவர்கள் மீது நம்பிக்கை ஏற்படவில்லை. நீயோ அவளது நம்பிக்கையைப் பெற்று மருந்து கொடுக்க அவளது மனநோய் அகன்றது. உனக்கு என் நன்றி'' என்றான்.



## 64-திருதராஷ்டிரனின் மறைவு

# மகாபாரதம்

திருதராஷ்டிரன் வந்தவர்களுக்குத் தானே பழங்களையும் கிழங்குகளையும் அளித்தான். மறுநாள் பாண்டவர்கள் சுற்றுப் புறப்பகுதிகளைப் பார்த்து வரச் சென்றார்கள். ஓரிடத்தில் சிலர் மந்திரங்களைக் கூறி ஹோமங்கள் செய்து கொண்டிருப்பதைக் கண்டார்கள். அங்கு பல மிருகங்கள் சற்றும் பயப்படாமல் திரிந்து கொண்டிருந்தன. பறவைகளும் வானில் கூட்டம் கூட்டமாகப் பறந்து கொண் டிருந்தன. பாண்டவர்கள் அது கண்டு வியந்து ஹோமம் செய்பவர்களுக்குப் பல பொருள்களைப் பரிசளித்து விட்டுத் தம் இருப்பிடத்திற்குத் திரும்பி வந்தார்கள்.

அச்சமயம் வியாசர் தம் சீடர்களுடன் அங்கு வந்தார். அவர் திருதராஷ்டிரனிடம் ''இந்த வனவாசம் உனக்கு சுகம் அளிக்கிறதா? காந்தாரியும் குந்தியும் உன்னை நன்கு கவனித்துக் கொள்கிறார்களா?'' என்று கேட்டார். அதன் பின் அவர் விதுரரைப் பற்றிக் கூறி ''விதுரன் எமதர்மனின் அம்சம். மாண்டவ்ய முனிவரின் சாபத்தால் அவன் உனக்குத் தம்பியாகப் பிறந்தான். அந்த எமதர்மனின் அம்சம் யுதிஷ்டிரனாகிய தருமனிடமும் உள்ளது.





பெரும் பாவங்களைச் சம்பாதித்துக் கொண்டார்கள். அவர்கள் நற்கதி அடைய வழியே இல்லையா? இது தான் என் மனதை அரித்துக் கொண்டிருக்கிறது'' என மனம் வெதும்பிக் கேட்டான். காந்தாரியும் கண்ணீர் உகுத்தவாறே வியாசரிடம் ''என் புதல்வர்கள் போரில் இறந்து பதினாறு ஆண்டுகளாகி விட்டன. இந்தக் காலம் முழுவதும் நானும் என் கணவரும் அவர்களைப் பற்றி எண்ணியே கண்ணீர் வடித்துக் கொண்டிருக்கிறோம். என் போல துரௌபதி, சுபத்திரை போன்றவர்களின் துக்கமும் கட்டுக்கடங்காமல் உள்ளது. இதையெல்லாம் போக்க வழி கூறுங்கள்'' என்று வேண்டினாள்.

அப்போது வியாசர் குந்தியிடம் ''நீ என்ன சொல்லப் போகிறாய்?'' என்று கேட்க அவள் தான் கர்ணனுக்காகக் கவலைப்படுவதாகக் கூறினாள். வியாசரும் காந்தாரியிடம் ''கவலைப்படாதே. போரில் மடிந்த உன் புதல்வர்களும் உறவினர்களும் எப்படி இருக்கிறார்கள் என்று நீ பார்க்கப் போகிறாய். அது போல குந்தி கர்ணனையும், துரௌபதி தன் தந்தையையும் சகோதரர்களையும் பார்க்கப் போகிறார்கள்.

பாரதப் போரில் இறந்தவர்கள் முன்பு தேவர்களாக இருந்தவர்கள். ராட்சஸர்களாகவும் இருந்தனர். திருதராஷ்டிரன் ஒரு கந்தர்வ மன்னன். பாண்டு மருத்கணத்தவரில் ஒருவன். விதுரன் எமதர்மனின் அம்சம்.

எனவே விதுரனும் தர்மனும் ஒன்றே எனத் தெரிந்து கொள்'' என்றார்.

பாண்டவர்கள் திருதராஷ்டிரனுடன் ஒரு மாத காலம் இருந்தார்கள். அப்போது வியாசர் பல கதைகளைக் கூறினார். கதைகளைக் கூறி முடித்த நாளில் நாரதர், பர்வதன், தேவலன், விஸ்வவசு, தும்புரு, சித்திரசேனன் முதலானோர் வந்தார்கள். திருதராஷ்டிரன் அவர்களை எல்லாம் நன்கு உபசரிக்கும்படி தருமரிடம் கூறவே அவரும் அவ்வாறே செய்தார். அதன் பின் யாவரும் ஒன்றாக அமர்ந்து பழங் கதைகளைக் கூறிப் பொழுது போக்கி மனம் மகிழ்ந்தார்கள்.

ஒரு முறை திருதராஷ்டிரன் வியாசரிடம் ''என் புத்திரர்கள் பாண்டவர்களுக்குப் பல அநீதிகளை இழைத்துப்

தருமனும் அதே அம்சம் கொண் டவனே. துரியோதனன் கலிபுருஷன். சகுனி சனி. துச்சாதனன் முதலியோர் ராட்சஸ அம்சத்தவர்கள். பீமன் வாயு. அர்ஜுனன் இந்திரன். நகுலனும் சகாதேவனும் அசுவினி தேவர்கள். அபிமன்யு சந்திரன். துரௌபதியும் திருஷ்டத்யும்னனும் அக்கினி. பிர கஸ்பதியின் அம்சம் துரோணர். பரம சிவனின் அம்சம் அசுவத்தாமன். பீஷ் மர் வசுக்களில் ஒருவர். நீங்கள் எல் லோரும் பாகீரதி நதிக்கரைக்குச் செல் லுங்கள். மகாபாரதப் போரில் இறந்த வர்கள் எப்படி இருக்கிறார்கள் என் பதை அங்கு வந்து நான் காட்டு கிறேன்'' என்றார்.



அது கேட்டு திருதராஷ்டிரனும் பாண்டவர்களும் முனிவர்களும் மற்றும் அங்கிருந்த யாவரும் பாகீரதி நதிக்கரையைச் சென்றடைந்தார்கள். சூரிய அஸ்தமன வேளையில் அவர் கள் நதியில் குளித்துக் கரைக்கு வந் தனர். வியாசரும் அங்கு வந்து மகா பா ரதப் போரில் இறந்தவர்களெல்லாம் வாருங்கள் என்று கூவி அழைத்தார்.

உடனே நதிக்கரைக்கு பீஷ்மர், துரோணர் மற்றும் விராடன், துரு பதன், உப பாண்டவர்கள், அபிமன்யு, கடோத்கசன், கர்ணன், துரியோதனன் முதலியவர்கள் நதியிலிருந்து வந் தார்கள்.

வியாசர் தம் தவ வலிமையால் திருதராஷ்டிரனுக்குப் பார்க்கும் சக்தி யை அளித்தார். அவனும் அங்கு வந்து சேர்ந்த மற்றவர்களும் பாரத போரில் இறந்த மாவீரர்களை எல்லாம் அப் போது கண்டார்கள். அதைத் தம் மாபெரும் பாக்கியமாக எண்ணி அவர்கள் அகமகிழ்ந்தார்கள். பாண்ட வர்கள் கர்ணனையும், அபிமன்யு வையும் உப பாண்டவர்களையும் கண் டனர். சற்று நேரமானதும் அவர்கள் கண்டவர்கள் யாவரும் மேல்லோகத் திற்குச் சென்றுவிட்டார்கள்.

அப்போது வியாசர் கௌரவர் களின் மனைவியர்களிடம் ''நீங்கள் யாராவது உங்கள் கணவன்கள் இருக் கும் இடத்திற்குச் செல்ல விரும்பி னால் நதியில் இறங்கலாம்'' என்றார். அவர்களும் திருதராஷ்டிரனிடமும் காந்தாரியிடமும் அனுமதி பெற்றுக் கொண்டு நதியில் இறங்கவே, உடனே அவர்கள் மறைந்து போனார்கள்.

இதன் பின் திருதராஷ்டிரன் சோகத்தோடு தன் குடிலுக்கு வந்தான். ஒரு மாத காலமாகத் தன்னுடன் இருந்த பாண்டவர்களிடம் நாட்டிற்குத் திரும்பிப் போகும் படி கூறினான். தருமருக்கோ ஹஸ்தினாபுரத்திற்குச் செல்ல மனமே இல்லை. ஆட்சியை நடத்த விருப்பம் இல்லை. அப்போது குந்தி பாண்டவர்கள் ஹஸ்தினாபுரத்திற்குப் போய் நாட்டை ஆள வேண்டுமென்று வற்புறுத்தினாள். தாய்ச் சொல்லை அவர்களால் தட்ட முடியவில்லை. அவர்கள் திருதராஷ்டிரனை வணங்கி விடைபெற்றுக் கொள்ள அவனும் அவர்களைக் கட்டித் தழுவி அனுப்பி வைத்தான்.

தருமர் ஹஸ்தினாபுரத்திற்கு வந்து சேர்ந்த சில மாதங்களுக்குப் பின் நாரத முனிவர் வந்து அவரைக் கண்டார். ''தருமா! நீ திருதராஷ்டிரனிடம் விடை பெற்றுக் கொண்டு வந்த பிறகு அவனும் காந்தாரியும் குந்தியும் கங்கா துவாரத்திற்குச் சென்றார்கள். அவர்களோடு சஞ்ஜயனும் பிராம்மணர்களும் சென்றார்கள்.

அங்கு திருதராஷ்டிரன் ஆகாரம் எதுவும் ஏற்காமல் ஆறு மாத காலம் கடும் தவம் செய்தான். காந்தாரியும் குந்தியும் கடும் விரதம் ஏற்றார்கள். சஞ்ஜயனும் விரதம் மேற் கொண்





டான். அதன் பின் திருதராஷ்டிரன் சஞ்ஜயனைக் கூட்டிக் கொண்டு காடுகளில் திரியலானான். காந்தாரியும் குந்தியும் கூட அவர்களோடு சேர்ந்து காட்டில் திரிந்தார்கள். ஒரு நாள் திருதராஷ்டிரன் கங்கையில் குளித்து விட்டுக் கரை ஏறி வரும் போது காட்டில் தீப்பற்றிக் கொண்டது. அப்போது அவன் சஞ்ஜயனிடம் "நீ தீயில் கருகாமல் தப்பிப் போய் விடு. நானும் காந்தாரியும் குந்தியும் இந்த அக்கினியில் பிரவேசித்து நற்கதியை அடைகிறோம்'' என்றான். சஞ்ஜயனோ அதற்கு இணங்கவில்லை. அப்போது திருதராஷ்டிரன் "மனிதனுக்கு காற்று, நீர், நெருப்பு இவற்றால் மரணம் ஏற்படத்தான் செய்யும். எனவே நீ தயங்காமல் இங்கிருந்து போய் விடு'' என்றான்.

சஞ்ஜயனும் திருதராஷ்டிரனையும் காந்தாரியையும் வலம் வந்து வணங்கி அவர்களை அக்கினிப்பிரவேசம் செய்யும்படி விடவே அவர்களும் தீப்பிழம்பினுள் நுழைந்தார்கள். சஞ்ஜயன் அங்கிருந்து ஆசிரமத்திற்கு வந்து என்னைக் கண்டு நடந்ததை கூறினான். அதன் பின் சஞ்ஜயன் இமயமலைக்குச் சென்று விட்டான்.''

இப்படி நாரதர் கூறியதும் பாண்டவர்களின் துக்கம் எல்லை இல்லாது போயிற்று. இச்செய்தி ஹஸ்தினாபுரம் முழுவதும் பரவவே மக்கள் யாவரும் துயரக் கடலில் மூழ்கினார்கள். நாரதரும் தருமரைத் தேற்றி "தருமா! அவர்கள் மூவரும் நற்கதியைத் தான் அடைந்திருக்கிறார்கள். நீ கவலைப்படாதே'' என்று ஆறுதல் கூறினார்.

தருமர் கங்கைக்குச் சென்று அம் மூவருக்கும் ஜலதர்பணம் செய்தார். அதன் பின் திவசம் செய்து விட்டு பனிரெண்டாவது நாளன்று தானங்களைச் செய்தார். பாரதப் போர் முடிந்து பதினெட்டு ஆண்டுகள் கழிந்த பிறகு திருதராஷ்டிரனுக்கு மரணம் ஏற்பட்டது. அந்தப் பதினெட்டு ஆண்டுகளில் கடைசி மூன்று வருடங்களை அவன் வனவாசத்தில் கழித்தான்.

திருதராஷ்டிரனின் மரணத்திற்குப் பின் தருமர் பதினெட்டு ஆண்டுகள் ஆட்சி புரிந்தார். அப்போது அவருக்கு மிகவும் துயரத்தைத் தரும் செய்தி ஒன்று கிடைத்தது. யாதவர்கள் யாவரும் ஒரு உலக்கையினால் அழிந்து

போனார்களாம். கிருஷ்ணரும் பல ராமரும் மட்டுமே எஞ்சி இருந்தன ராம். தருமர் தன் சகோதரர்களிடம் ''யாதவர்கள் ஒருவருக்கொருவர் அடித்துக் கொண்டு இறந்து போய் விட்டார்களாம். இப்போது நாம் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டார்.

யாதவர்கள் அழிய அவர்கள் விளையாட்டாகச் செய்த ஒரு வினையே காரணம். ஒரு முறை விசுவாமித்திரரும் கண்வரும், நாரதரும் துவாரகைக்குச் சென்றார்கள். அவர்கள் வந்தது கண்டு சாரணன் முதலான யாதவர்கள் சாம்பனுக்குப் பெண் வேஷம் போட்டு அவனை அம்முனிவர்களின் முன் நிறுத்தி ''மகாத்மாக்களே! இவள் கர்ப்பிணி. இவளது கணவன் தனக்கு ஆண் பிள்ளை தான் வேண்டும் என்கிறான். இவளோ பெண் பிள்ளையைப் பெற்றுக் கொள்ள வேண்டுமென விரும்புகிறாள். இவளுக்கு பிறக்க போவது ஆண் குழந்தையா அல்லது பெண் குழந்தையா என்று நீங்கள் கூறுங்கள்'' என்றனர்.

முனிவர்கள் இந்த விளையாட்டால் கோபம் கொண்டு இந்த சாம்பனுக்கு ஒரு உலக்கை பிறக்கும். அது யாதவ குலத்தையே அழிக்கும்'' என்று சாபம் கொடுத்தார்கள். யாதவர்கள் திகைத்துப் போனார்கள். தாம் விளையாட்டாகச் செய்தது வினையாகிவிட்டதே என்று எண்ணி பெரிதும் மனம் வருந்தினார்கள்.

அவர்கள் அம்மூன்று முனிவர்களின் கால்களில் விழுந்து வணங்கி ''நாங்கள் ஒரு விளையாட்டாக இதைச் செய்து விட்டோம். இப்படிச் செய்தது தவறு தான். எங்களை மன்னித்து சாபத்தை விலக்கி விடுங்கள்'' என்று கெஞ்சினார்கள். முனிவர்களோ ''நாங்கள் கொடுத்த சாபத்தை விலக்க முடியாது. பெரியவர்களிடம் மரியாதையாக நடந்து கொள்ளத் தெரியாதவர்களின் கதி இது தான்'' என்று கூறி விட்டுப் போய் விட்டார்கள். அதன் பின் யாதவர்கள் கிருஷ்ணரைக் கண்டு நடந்ததைக் கூறினார்கள். கிருஷ்ணரும் ''அவர் சொன்ன படியே நடந்து விட்டுப் போகட்டும்'' என்று கூறினார்.





# ஐயோ! ராணியின் சமையலா!!

ராமாபுரராஜா ராமசிம்மனும் ராணி ரமாதேவியும் ஒரு நாள் மாலை கடற் கரையில் உலாவச் சென்றனர். அப் போது ஒரு மீனவனுக்கு அவன் மனைவி உண்ண உணவு கொடுத்துக் கொண்டிருப்பதை அவர்கள் கண் டனர். மீனவன் தன் மனைவியிடம் ''இன்று நீ வைத்த மீன் குழம்பு பிர மாதம். தினமும் இதே மாதிரி வைத்து எனக்குப் போடு'' என்றான். அவன் மனைவியும் ''அதற்கென்ன மச்சான்! அப்படியே செய்கிறேன். பெண்சாதி தன் புருஷனுக்கு சமைத்துப் போடு வதில் தான் சந்தோஷம் அடை கிறாள்'' என்றாள்.

இதைக் கேட்ட ரமாதேவி இனி தானும் மீனவப் பெண் கூறியபடியே சமையல் செய்து தன் கணவனுக்கு உணவளிக்க வேண்டும் என்று தீர்மா னித்துக் கொண்டாள். மறுநாள் காலை யில் ராணி சமையலறைக்குள் புகுந்து சமையல்காரர்களிடம் ''இன்று முதல் ராஜாவுக்கும் எனக்கும் நானே சமைத்து உணவு பரிமாறப் போகி றேன்'' என்று கூறி உடனே சமையல் வேலையில் ஈடுபட்டாள்.

ராஜா மதியவேளையில் உணவு உண்ண வந்த போது ராணி ரமாதேவி தான் சமைத்தவற்றை எல்லாம் எடுத்து அவன் முன் வைத்து ''இன்று முதல் என் கைச் சமையலைத்தான் சாப்பிடப் போகிறீர்கள். சாப்பிட்டு விட்டு எப்படி இருக்கிறது என்று சொல்லுங்கள்'' எனக் கூறி உணவைப் பரிமாறினாள். ராஜா ராமசிம்மனும் அவள் விட்ட குழம்பை சாதத்தில் பிசைந்து ஒரு வாய் போட்டுக் கொண் டதும் அதில் உப்பும் இல்லை, புளிப்பு, காரம் என்று எதுவும் இல் லை என்று கண்டான். அவள் கலத் தில் போட்ட கத்தரிக்காய்க் கறி தீய்ந்து போயிருந்தது. பாயசத்தில் விட்ட பால் திரிந்து போயிருந்தது.

இந்தக் குறைகளை எல்லாம்

காரை. குருமூர்த்தி

சொன்னால் ராணியின் மனம் நோகுமே என்று எண்ணிய ராஜா ''உன் சமையல் பிரமாதம்'' என்று புகழவே அவளும் மகிழ்ந்து போனாள்.

மறுநாள் அவள் சமைக்க முற்பட்ட போது, ராமசிம்மன் ''ஐயோ! நீ சமைக்காதே. சமையல்காரர்கள் பலர் இருக்கும் போது நீ ஏன் கஷ்டப்பட வேண்டும்?'' என்று சொல்லிப் பார்த்தான். ரமாதேவியோ ''எனக்கு ஒரு கஷ்டமும் இல்லை. கணவனுக்கு சமைத்துப் போட்டு அவன் திருப்தியாகச் சாப்பிடுவதைக் கண்டு மனைவி மகிழ்ச்சி அடைகிறாள். அதைத்தான் நான் செய்கிறேன்'' என்று கூறி சமையலில் ஈடுபட்டாள்.

இப்படியாக ரமாதேவியின் சமையலை விதியே என எண்ணி ராஜா ஒரு வார காலம் சாப்பிட்டான். அவனுக்கு சாப்பிடவே பிடிக்கவில்லை. அரண்மனையை விட்டு எங்காவது ஓடிப் போய் விடலாமா என்று கூட எண்ணினான். அப்போது ஆஸ்தான விதூஷகன் வரவே அவனிடம் தன் நிலையைக் கூறி ''என் கஷ்டகாலம். இப்படி அனுபவிக்க வேண்டி இருக்கிறது. இதிலிருந்து விடுபட ஏதாவது ஒரு வழி சொல்'' என்று கேட்டான்.

அவனும் ''மூன்று நாட்கள் பொறுத்துக் கொள்ளுங்கள். அண்டை நாட்டு மன்னனின் பிறந்த நாள் கொண்டாட்டத்தில் கலந்து கொண்டு விட்டு வந்து இதற்கு வழி செய்கிறேன்'' என்று கூறி விட்டுச் சென்றான்.



ராஜா ராமசிம்மன் மூன்று நாட்களுக்குப் பல்லைக் கடித்துக் கொண்டு அவஸ்தைப் பட்டவாறே விதூஷகனின் வரவை எதிர்நோக்கி இருந்தான். அவன் வந்ததும் ராணி ரமாதேவி அவனைக் கூப்பிட்டு ''விதூஷகா! அண்டை நாட்டு ராணி மிக மிக அழகானவள் என்று பேசிக் கொள்கிறார்களே. அவள் என்னை விட அழகா?'' என்று கேட்டாள். விதூஷகன் உதட்டைப் பிதுக்கியவாறே ''சீச்சீ அவள் செயற்கை சாதனங்களைப் பயன்படுத்தி தன்னைப் பேரழகியாகக் காட்டி கொள்கிறாள்.

உங்கள் முகத்தின் களை அவள் முகத்தில் காண முடியாதே. இப்போது உங்கள் முகம் கொஞ்சம் கருத்து விட்டதால் உங்கள் அழகு குறைந்து விட்டதாகக் கூறி விட முடியுமா? நீங்கள் பத்து நாட்களாக சமையல் செய்ததால் அடுப்பு

வெப்பம் பட்டு கொஞ்சம் கருத்துத் தான் போய் விட்டீர்கள். அந்த அண்டை நாட்டு ராணி இன்னொரு வழியில் தன் அழகை நிலைநிறுத்தி கொள்ள முயல்கிறாள். அவள் சமையலறைப் பக்கமே போகிற தில்லை. அதனால் அவள் முகம் கருத்துப்போகிற தில்லை. அது மட்டுமல்ல. தான் சமையலே செய்யாமல் சமையல்காரர்கள் செய்து வைக்கும் உணவுப் பதார்த்தங்களி லிருந்து தன் கணவனுக்குப் பிடித்த மானவற்றை மட்டும் எடுத்து வந்து அவள் பரிமாறி விடுகிறாள். அவள் கணவனான அண்டை நாட்டு மன்னனும் தன் மனைவி தன் மனதை அறிந்து உணவு பரிமாறுகிறாள் என்று திருப்தி அடைகிறான். இது தான் அந்த ராணி தன் அழகைக் காத்துக் கொள்ளும் ரகசியம்'' என்றான்.

அது கேட்டு ராணி ரமாதேவி ''இனி தான் சமையலறைப் பக்கமே போகமாட்டேன். அதனால் என் அழகு குறையாது. என் கணவர் விரும்பும் உணவுப் பதார்த்தங்களை சமையல்காரர்கள் செய்து வைப்பதி லிருந்து எடுத்து வந்து என் கணவ ருக்குப் பரிமாறி சாப்பிட வைத்து நான் மகிழ்வேன்'' என்றாள்.

விதூஷகன் இந்த நற்செய்தியை ராஜா ராமவர்மனிடம் கூறவே அவனும் தான் அணிந்திருந்த முத்து மாலையை எடுத்து விதூஷகனுக்குப் பரிசாக அளித்து ''உனக்கு எப்படி நன்றி சொல்வதென்றே தெரிய வில்லை. ஐயோ, ராணியின் சமையலா என்று வாழ்நாள் முழுவதும் பயந்து கொண்டிருந்தேன். எப்படி ராணியின் மனதை மாற்றி னாய்?'' என்று கேட்டான்.

விதூஷகனும் ''பெண்களுக்குத் தம் அழகைப் பற்றி யாரும் குறை சொல்லக் கூடாது என்ற எண்ணம் மனதில் உள்ளதே. அதைப் பயன் படுத்தினேன். வெற்றி கிடைத்தது'' எனக் கூறி சிரித்தான்.



இது அம்புலிமாமாவின் அன்பளிப்பு

4

# வீரதீர பராக்கிரமன்

ஓவியம் : பாணி

முதலமைச்சரின் மகன் ஆதித்தன் கொள்ளைக்காரர்களைப் பிடித்து சிறையில் அடைத்தான். அருணா அவனைக் கண்டு முதலமைச்சரும் அவளது தந்தையும் ஒரே நாளில் தான் இறந்தார்கள் எனக் கூறி அவனிடம் ஒரு பெட்டியைக் கொடுத்தாள். அதில் முதலமைச்சர் தன் கைப்பட எழுதிய கருடனின் கதை இருந்தது.













சேனாதிபதிக்கு
என்னைச் சற்றும்
பிடிக்கவில்லை என்று
நன்கு தெரிகிறது.


அவமானமே.
அவர்களை எல்லாம்
விடுதலை செய்து
தொலை யுங்கள்.
ரவீந்திரனை எப்படி
யாவது காப்பாற்ற
வேண்டும்.
அப்படியே,
மகாராஜா!


கொள்ளைக்காரர்கள் விடுதலை
செய்யப்பட்டனர்.


ரவீந்திரனைவிடுவித்து அழைத்துவர
ஆதித்தன்கருடத்திரிக்குச்சென்றான்.


காட்டைஅடைந்ததும்அவனைஒருமர்மக்குரல்
ஒருகுகையருகேஅழைத்துச்சென்றது.


குகை வாயிலில் ஒரு
வன் கட்டப்பட்டு முகத்
திரையிடப்பட்டு ஒரு
குதிரை மீது உட்கார
வைக்கப்பட்டிருப்பதை
அவன் கண்டான்.


ஆதித்தன் அம்மனிதனின் முகத்திரையை அகற்றிப் பார்த்ததும் பலமாகச் சிரித்தான்.


அவமானப்பட்ட போதிலும் ரவீந்திரன் அதை மூடி மறைக்க முயன்றான்.


நொடியில் தப்பிஓடி விட்டார்கள். நீங்கள் வந்ததைப் பார்த்ததால் அவர்களைப் பிடிக்க முடியாது போயிற்று


காட்டில் பால் போல நிலா ஒளிவீசிக் கொண்டிருந்தது. மாறு வேடத்தில் ஒருவன் காவல் காத்துக் கொண்டு இருந்தான்.


இச்சமயம் விடுதலை செய்யப்பட்ட கொள்ளைக்காரர்கள் குகைக்குள் தமக்குள் பேசிக்கொண்டார்கள்.
யார் இந்த கருடன்?
அவன் ஏன் நம்மை விடுவித்தான்?


வீரபாகு குகைக்கு வெளியே வந்து மாறுவேடக் காவலாளியை அணுகினான்.
நாங்கள் விடுவிக்கப் பட்டோம். இந்த உதவியை மறவோம். ஆனால் நீங்கள் யாரென்று தெரியவில்லையே!
நீ முதலமைச்சரின் மெய்க் காவலாளியாக இருந்தவன் தானே


நீங்கள் செய்வதெல்லாம் சட்ட விரோதமானவை என்று உங்களுக்குத் தெரியாதா?''


சரியே. நான் முதலமைச் சரின் மெய்க்காவலாளி யாக இருந்தவனே. சேனாதி பதி புரிந்த கொடுஞ்செயல் களை எல்லாம் கண்டேன். அதனால் நான் அங்கிருந்து தப்பி ஓட வேண்டியதா யிற்று. அங்கே இருந்திருந் தால் நானும் கொல்லப் பட்டிருப்பேன்.


அப்படியா! நடந்ததை எல் லாம் சொல்!
ரவீந்திரன் மக்களைத் துன் புறுத்தத் தொடங்கவே, அது பொறுக்க முடி யாமலே நாங்கள் எதிர்த்துப் போராட லானோம்.
முதலமைச்சரைக் கொன்றவன் சேனாதி பதியே என்று நீ எந்த ஆதாரத்தில் கூறுகிறாய்?''


சேனாதிபதி திருட்டுத் தனமாக அரண் மனைக்குள் நுழைந்து மன்னனருகே சென்றான். அப்போது ஏதோ பேச்சுக் குரல் கேட்டு அவன் சுவரோரமாகப் பதுங்கி அதை ஒட்டுக் கேட்டான்.


ஐயா! மக்களின் கலகம் நாளுக்கு நாள் அதிகரிக்கிறது. ரவீந்திரனின் அடாத செயல்களைப் பொறுக்க முடியாமல் மனம் குமுறுகிறார்கள்.


அதைக் கேட்டு சேனாதிபதி தனக்கு இடைஞ்சலாக உள்ள முதலமைச்சரை ஒழிக்கத் தீர்மானித்தான்.


அதன் பிறகே மன்னன் ஆதித்தனை வரவழைத்தான். எங்கள் திட்டங்களில் அவன் குறுக்கிட்டான். அவன் அப்பாவி. சரி. நான் வருகிறேன்.
வீரபாகு!
தன்னைப் பெயர் சொல்லி அழைத்துப் புன்னகை புரியும் முகத்தை அவன் பார்த்தான்.
(தொடரும்)

# நம் இந்தியா

## வினாக்கள்

போர்த்துக்கீசியர், டச்சுக்காரர்கள், பிரஞ்சுக்காரர், ஆங்கிலேயேர் என்ற அயல்நாட்டுக்காரர்கள் நம் நாட்டில் சிறிது காலத்திலிருந்து நீண்ட காலம் வரை ஆட்சிபுரிந்தனர். ஆனால், நம் நாட்டு மக்கள், அவர்களுடன் சுதந்திரத்திற்காகப் போராடி அவர்களை வெளியேற்றினார்கள். ஆனால் சில தனிப்பட்ட அயல்நாட்டுக்காரர்கள் நம் நாட்டை விரும்பி நம் மக்களுக்கு நற்பணிகள் புரிந்திருக்கிறார்கள். இந்த வினாக்களின் விடைகளைக் கண்டு அவர்களைத் தெரிந்து கொள்ளுங்கள்.

1. ஒரு கிருஸ்துவப் பாதிரி இங்கிலாந்திலிருந்து வந்து நம் நாட்டு மக்களுக்குப் பணிபுரிந்து 'தீன பந்து' என்று பெயரும் பெற்றார். அவர் யார்?
2. அயர்லாந்திலிருந்து வந்து நம் நாட்டையே தன் தாயகமாக்கிப் கொண்டு இந்திய சுதந்திரப் போராட்டத்தை ஆதரித்தவரும், சென்னையைத் தலைமையமாகக் கொண்டு உலகப் பேரியக்கத்தைத் துவக்கியவருமான பெண்மணி யார்?
3. வங்காளத்தின் ஆசிய சொஸைடியை 1789ல் துவக்கிய ஆங்கிலேயர் யார்? அவரது சாதனை என்ன?
4. கல்கத்தாவிலும் லக்னௌவிலும் பள்ளிகளை நிறுவிய பிரெஞ்சுக்காரர் யார்?
5. மகாத்மா காந்தியின் பணிகளில் துணை புரிந்து இந்தியப் பெயரை வைத்துக் கொண்ட ஆங்கிலப் பெண்மணி யார்?
6. அல்பேனியாவின் ஏக்னஸ் கோன்ஸ்ஹா போஜாக்ஸ்ஹிவ் இந்தியாவிலும் உலகின் மற்ற பகுதிகளிலும் வேறு எந்தப் பெயரில் புகழ் பெற்றவர்?

## மே மாத வினாக்களின் விடைகள்

1. தேசியக் கொடி.
2. தேசப்பிதாவான மகாத்மா காந்தி.
3. உலகில் முதலாவது தேர்ந்தெடுக்கப்பட்ட கம்யுனிஸ்ட் அரசாங்கத்தை நடத்தியவர் கேரள முதலமைச்சர் ஈ. எம் . எஸ். நம்பூதிரி பாட்.
4. 1852ல், சிண்டே டாக்ஸ் எனப்படுவது அவை தான் ஆசியாவிலேயே வெளியிடப்பட்ட முதலாவது தபால் தலைகள்.
5. புது டில்லியை 1931ல் ஆரம்பிக்கப் பட்டதை நினைவூட்ட ராஷ்டிரபதி பவன், இந்தியா கேட், நாடாளுமன்றம் ஆகியவற்றின் படங்களைக் கொண்டு வெளியிடப் பட்ட தபால் தலைகள்.
6. அலகாபாதிலிருந்து 8கி.மீ தொலைவில் உள்ள நைனி சிறைச்சாலைக்கு 6500 பொருள்கள் 1911 பிப்ரவரி 18ல் விமானத்தின் வாயிலாகக் கொண்டு செல்லப் பட்டன.
7. பின்கோடு 1972 ஆகஸ்ட் 15ல்.
8. எட்டு பிரதேசங்கள்.
9. தபாலாபீஸ் சட்டத்தை 1837ல் இயற்றியதால்.
10. இந்திய நான்கணா தபால் தலை, தலைகீழான. இத்தபால் தலையின் உண்மையானவை 25 மட்டுமே பிரிட்டிஷ் ராணியின் தலையைத் தலைகீழாக அச்சடிக்கப்பட்டதாய்க் கொண்டுள்ளன.
11. மகாத்மா காந்தி.
12. புதுடில்லியில்.

## அன்று இதே மாதத்தில் பிறந்தவர்

### பி.சி.மஹாலநோபிஸ்

இன்று எங்கு பார்த்தாலும் எதற்கும் புள்ளி விவரங்கள் அளிக்கப்படுகின்றன. கணிப்புகள் நடத்தப்படுகின்றன. பலவித அட்டவணைகள் தயாரிக்கப்பட்டு விவரங்கள் எண்களில் அளிக்கப்படுகின்றன. இந்த முறைகளை நடைமுறைப்படுத்திக் காட்டியவர் நம் நாட்டின் பிரசாந்த சந்திர மஹாலநோபிஸ் ஆவார்.

இந்தியாவை உலகப்புள்ளி விவரத் துறைக்குக் கொண்டு சென்றவர் மஹாலநோபிஸ். 1893 ஜூன் 29ல் பிறந்த இவர் கல்கத்தா பல்கலைக் கழகத்திலிருந்து 1912ல் பி.எஸ்.ஸி ஆனர்ஸ் பட்டம் பெற்றார். கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் கணிதத்தில் எம்.ஏ பட்டம் பெற்றார். இச்சமயத்தில் தான் இவருக்குப் புள்ளி விவரங்கள் மீது ஆவல் ஏற்பட்டது. இவரது ஆசிரியர் டபிள்யு. எச். மெகாலே இவரை பயோமெட்ரிகாவையும் பயோமெட்ரிக் டேபிள்களின் புதிய தொகுதிகளையும் படிக்கும் படிக்கூறினார்.

இந்நூல்கள் மஹாலநோபிஸைக் கவரவே, இவர் இத்துறையில் ஆழ்ந்து ஈடுபட்டார். 1915ல் இந்தியா திரும்பிய இவர் கல்கத்தா பல்கலைக் கழகத்தில் இயல்பியல் விரிவுரையாளராகச் சேர்ந்தார். ஓய்வு நேரங்களில் புள்ளி விவரங்கள் பற்றி ஆராயலானார்.

கல்கத்தா பல்கலைக் கழகத்தில் தேர்வு முறைகளில் மாற்றம் கொண்டு வர அறிஞர்கள் எண்ணிய போது அவர்கள் மஹாலநோபிஸின் உதவி யை நாடினார்கள். இவர் வினாத்தாள்கள், மாணவர்கள், ஆசிரியர்கள் என்று எல்லோரிடமும் விவரங்களைக் கேட்டு தம் கருத்தை அளிக்க அது அப்படியே ஏற்கப்பட்டது.

அது போல பல துறைகள் இவரிடம் கருத்து கேட்டு அதனை ஏற்றன. 1931ல் இவர் இந்தியப் புள்ளி விவரக் கழகத்தை அமைத்தார். 1950ல் நம் நாட்டில் திட்டக் கமிஷன் முதலில் அமைக்கப்பட்டபோது இவர் அதன் துணைத்தலைவராக நியமிக்கப்பட்டார். பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு அக்கமிஷனின் தலைவர்.



மஹாலநோபிஸின் முக்கிய முறையே மஹாலநோபிஸ் தொலையளவு என்பதாம். இது பூமியின் இரு இடங்களினிடையே உள்ள தூரத்தைக் கண்டறியப் பயன்படுகிறது. இந்திய தேசிய வருமானக் கமிட்டியின் தலைவராக 1947ல் பணி புரிந்தவர். 1945ல் ராயல் சொஸைடியின் உறுப்பினராக்கப்பட்டவர். 1968ல் இவருக்கு பத்மபூஷண் விருது அளிக்கப்பட்டது. 1972 ஜூன் 28ல் இவரது மரணம் ஏற்பட்டது.



# இருவரில் யார்?

சாளுவ மன்னனின் இரு மனைவிகளும் ஒரே நாளில், ஒரே நேரத்தில் ஆண் குழந்தைகளைப் பெற்றெடுத்தனர். மன்னன் அவர்களுக்கு ஜெயன், விஜயன் என்று பெயரிட்டான். அவர்கள் வளர்ந்து, வாலிபர்களானதும் அரசகுமாரர்கள் கற்க வேண்டிய போர்க் கலைகளைக் கற்க ஏற்பாடு செய்தான். ஜெயன் குதிரை சவாரியிலும், வாட் போரிலும் சிறந்து விளங்கினான்.

மன்னன் முன் அவர்களில் யாருக்குத் தனக்குப் பின் நாட்டை ஆளப் பட்டம் கட்டுவது என்ற பிரச்சனை எழுந்தது. இருவரும் ஒரே வயதினர். யார் மூத்தவன் என்று சொல்லவே முடியாது. நாட்டை இரு பாகங்களாக்கவும் மன்னன் விரும்பவில்லை. தன் அமைச்சரை மன்னன் கலந்து யோசனை செய்யவே அவரும் ''இருவரும் எல்லா விதத்திலும் சமமாக இருக்கிறார்கள். யாராவது ஒருவன் மற்றவனை விட ஒரு அம்சத்தில் உயர்ந்திருந்தால் அவனுக்கே பட்டத்தை அளிக்கலாம். ஆனால் அதை எப்படிக் காண்பது?'' என்று கூறவே மன்னன் அப்பிரச்சினைக்கு வழி காண முடியாமல் திகைத்தான்.

இச்சமயத்தில் மாளவ மன்னனின் மகளுக்கு சுயம்வரம் நடக்கப் போவதாகவும் அதில் அரசகுமாரர்களுக்கு போர்க் கலைகளில் போட்டிகள் வைக்கப்படும் என்றும் அதில் முதல்வனாக வருபவனுக்கே மன்னன் தன் மகளை மணமுடித்து வைப்பான் என்று அறிவிக்கப்பட்டது. சுயம்வரத்தில் கலந்து கொள்ள எல்லா அரசகுமாரர்களுக்கும் அழைப்புகள் அனுப்பப்பட்டன.

சாளுவ மன்னனுக்கும் அழைப்பு வரவே, அவன் தன் இரு மகன்களையும் சுயம்வரப் போட்டிகளில் கலந்து கொள்ள அனுப்புவது என்று தீர்மானித்தான். அங்கு அந்த இருவர்களில் யார் உயர்ந்தவன் என்பது தீர்

வெ. லாவண்யா



மானிக்கப்படும், ஆதலால் தன் பிரச்சினைக்குத் தீர்வு காண வழி கிடைத்து விட்டது என்று எண்ணி சாளுவ மன்னன் மகிழ்ந்து போனான். அவன் ஜெயனையும், விஜயனையும் மாளவ நாட்டின் தலைநகருக்கு அனுப்பினான். சுயம்வரத்திற்குப் பல நாடுகளிலிருந்து அரசகுமாரர்கள் வந்திருந்தார்கள். அவர்கள் தங்கியிருக்க இடமும், மற்ற வசதிகளையும் மாளவ மன்னன் செய்து கொடுத்தான்.

சுயம்வரத்திற்கான போட்டிகள் ஆரம்பமாயின. எல்லா போட்டிகளிலும் ஜெயனும், விஜயனும் மற்ற அரசகுமாரர்களை வென்று, சம நிலையில் முதலிடத்தைப் பிடித்து விட்டனர். இதனால் மாளவ மன்னனுக்குப் பிரச்சினை ஏற்பட்டது. அந்த இருவரில் யாருக்குத் தன் மகளை விவாகம் செய்து வைப்பது என்பதே அவன் பிரச்சனை.

அதனால் போட்டிகள் முடிந்ததும், மாளவ மன்னன் போட்டியில் யார் வெற்றி பெற்றார் என்பதை மூன்று நாட்களுள் அறிவிப்பதாகக் கூறினான். பிறகு அவன் ''ஜெயனும், விஜயனும் சம நிலையில் உள்ளனர். அவர்களில் யார் ஒரு படி உயர்ந்தவர் எனக் கூறுபவர்க்கு என் இளைய மகளை விவாகம் செய்து வைப்பதோடு, என் நாட்டில் பாதியை அவருக்கு அளிக்கிறேன்'', என்று பறை சாற்றுவித்தான்.

மறுநாள் ஒரு முனிவரும், அவரது சீடனும் மாளவ மன்னனின் தர்பாருக்கு வந்தனர். அவர்கள் மன்னனிடம், அவனது பிரச்சினையைத் தீர்க்க வழி கூறுவதாகச் சொல்லவே,

மன்னனும் என்ன அது என்று கேட்டான். அப்போது முனிவரின் சீடன், ''ஜெயன் குதிரைச் சவாரியிலும், வாட்போரிலும் முதலாவதாக வந்தவன். விஜயன் யானை ஏற்றத்திலும், மற்போரிலும் முதலாவதாக வந்தவன். குதிரை மீதமர்ந்து, வாட் போர் புரியும் வீரன், யானை மீதமர்ந்து மற்போர் புரியும் வீரனை விடப் போரில் உயர்ந்தவனே. மேலும், குதிரை மீது அமர்ந்துள்ள வீரன் யானையை எளிதில் தாண்டிப் போய் விடலாம். ஆனால் யானை மீது அமர்ந்துள்ள வீரனால் எளிதில் குதிரையைத் தாண்டி விட முடியாது. யானை மீது அமர்ந்து குதிரை வீரனுடன் போர் புரிய அவன் குனிந்து எதிரியைத் தாக்க வேண்டும். அப்படிப் போர் புரிந்தால் குதிரை வீரன் எளிதில் வெற்றி பெற்று விடுவான். எனவே, போரில் குதிரை வீரனின் கையே ஓங்கி நிற்கும். ஆகவே, இப்போட்டியில் முதலிடம் பெற்றவன் ஜெயன்'', என்றான்.

அதுகேட்டு மன்னனும், மற்றவர்களும், ''சரியான தீர்ப்பு எனக் கூறிக் கைதட்டி மகிழ்ந்தனர். அப்போது முனிவரும், அவருடன் வந்த சீடனும் தம் வேடங்களைக் கலைத்தார்கள். அவர்கள் வேறு யாருமில்லை. ஜெயனும், விஜயனுமே. அதுகண்டு யாவரும் ஆச்சரியப்பட்டார்கள்.

அப்போது ஜெயன் ''எங்களிடையே போட்டி மனப்பான்மை இல்லை. இருவரும் வயதிலும் போர்க் கலைகளிலும் சரி சமான மாணவர்களே. அதனால் தான் இதற்கு முடிவு காண முடியாது திகைத்தீர்கள்'' என்றான்.

மாளவ மன்னன் தன் மூத்த மகளை ஜெயனுக்கு விவாகம் செய்து வைத்தான். பிரச்சனைக்குத் தீர்வு கூறிய விஜயனுக்குத் தன் இளைய மகளைக் கல்யாணம் செய்து வைத்தான். இவ்வாறு மாளவ மன்னனின் பிரச்சினையும் தீர்ந்தது, சாளுவ மன்னனின் பிரச்சினையும் தீர்ந்தது.





வாக்கியங்களை
எழுதுங்கள்

# போட்டோ வாக்கியப் போட்டி





**இந்த போட்டோக்களுக்கு ஒவ்வொரு சொல்லாலோ, அல்லது சிறு வாக்கியங்களாலோ தொடர்புடையதாக எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு ஆகஸ்ட் 2001 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா,
எண்: 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.



வாழ்த்துக்கள்

ஏப்ரல் 2001 இதழில் வெளியிடப்பட்ட
போட்டியில் வெற்றி பெற்றவர்:

**வி. சாரங்கபாணி**
63, அழகண்ண கவுண்டர் வீதி,
குப்பக்கோனாபுதூர்,
கோயமுத்தூர் - 641 038.

பரிசு பெற்ற வாக்கியங்கள்



இந்த வாளின் கூர்மை
இந்த ஆ ளின் நேர்மை

AMBULIMAMA (Tamil) JUNE 2001 Regd. with RNI. No.1095/57
Registered No. TN/Chief PMG-839/2001